# ஒரு நூற்றுண்டுக்கு மேலாகவே

# இந்தியாவுக்கு சேவை



சென்ற ஒரு நூற்றுண்டுக்கு மேலாகவே, உலகின் உன்னத கடிகாரங்களை இந்தியாவுக்கு தருவிப்பது எங்கள் நோக்கமாக இருந்த தன்பதைக் குறித்து மிகப் பெருமையடைகிறோம். தற்போது வரும் சப்ளைகள் தேவையைப் பூர்த்தி செய்ய இயலவில்லையாயினும், ஒவ்வொருவருடைய வேண்டுகோளையும் 'நிச்சயமாக' நிறைவேற்றும் நந்நாளை எதிர்பார்க்கிறோம்.

பேவர் லூபா & கம்பெனி லிமிடெட் ★ பம்பாய் ★ கல்கத்தா



**FAVRE-LEUBA**





மலர் 5 } இதழ் 24 }

1946 ஜனவரி 20

{ பார்த்திப { தை மீ 7உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.




வாழ்கநீ! எம்மான், இந்த
வையத்து நாட்டி லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி,
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர்
பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மஹாத்மா! நீ வாழ்க! வாழ்க!

—பாரதியார்.







# ஈறுகளில் ரத்தம் கசியக் கூடாது

**—முன் ஜாக்கிரதையாக இருங்கள்!**

உடனே கவனிக்க வேண்டும் — ரத்தம் கசியும் ஈறுகள் பற்சொத்தைக்கு ஆரம்பம். கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் ஈறு வியாதிகளையும் பயோரியா ஜின்ஜிவிடிஸ் முதலிய பல் வியாதிகளையும் தடுத்து கட்டுப் படுத்துகிறது. இவ் வியாதிகள் பற்களை நாசமாக்குவதுடன் அவைகளை நிறுத்தாவிடில் தேக ஆரோக்யத்தையே பாழாக்கும். அதில் உள்ள சோடியம் ரெஸினோலியேட் ஈறு உபாதைகளுக்கு பல் வைத்தியர்களின் சிகிச்சை. பற்களையும் ஈறுகளையும் ஆரோக்யமாக வைத்திருக்க கிப்ஸ் "எஸ். ஆர்." வழக்கமாக உபயோகியுங்கள்.

**Gibbs**

**"S.R." TOOTHPASTE**




GSR. 17-33 TM

D. & W. GIBBS LTD., LONDON, ENGLAND



கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 24

# என்ன சேதி?

## சிந்து இரத்தம்!

கொஞ்ச நாளாக இந்தியர்களில் சிலருக்கு அபாரமான வீரம் ஏற்பட்டிருக்கிறது. ரத்தம் கேவலம் தண்ணீருக்குச் சமம் என்ற முடிவுக்கு அவர்கள் வந்திருக்கிறார்கள். இந்த மாதிரியாக நினைப்பவர்கள் நம்முடைய இந்திய தேசிய ராணுவ வீரர்களான காப்டன் ஷா நவாஸோ, தில்லானோ அல்ல என்பதையும் முதலிலேயே சொல்லி விடுகிறோம். சற்றும் எதிர்பாராத இடத்திலிருந்தே அத்தகைய வீரம் கிளம்புகிறது.

ஸர் சி. பி. ராமஸ்வாமி ஐயர் கொஞ்ச நாளைக்கு முன்னால் சென்னையில் பேசும்போது, "பாகிஸ்தான் கூடவே கூடாது. அதனால் இந்தியாவில் உள்நாட்டுக் கலகம் வந்தாலும் பாதகம் இல்லை; இரத்தம் சிந்துவதற்குத் தயாராகவே இருக்கிறோம்!" என்று மார்தட்டி விட்டுப் போனார். இப்போது முஸ்லிம் லீக் தலைவரான ஜனாப் ஜின்னா டில்லியிலே செய்த ஆவேசம் மிகுந்த ஒரு பிரசங்கத்திலே, பாகிஸ்தானுக்காக முஸ்லிம்கள் இரத்தம் சிந்தத் தயாரா யிருப்பதாகவும், ஆனால் அதற்குரிய காலம் இன்னும் வரவில்லையென்றும் பேசி யிருக்கிறார். இந்த இரண்டு பிரமுகர்களும் அரசியல் வாழ்க்கையிலே எந்த விதமான தியாகமும் செய்திருப்பதாக நாம் கேள்விப்பட்டதில்லை, இவர்கள் இரத்தத்தைப் பற்றிப் பேசுவதைப் பார்த்தால் இரத்தம் என்றால் என்ன வென்பதைப் பற்றியே நமக்குச் சந்தேகம் உண்டாகி விடுகிறது.

இவர்கள் இரத்தத்தைச் சிந்தச்சொல்லி மக்களுக்கு உற்சாக மூட்டுவதன் மூலம் நாளை உண்மையாகவே ஒரு கலகம் உண்டாகிறது என்று வைத்துக் கொள்வோம். ஜனாப் ஜின்னாவும் ஸர் சி. பியும் முன்னாலே வந்து தங்கள் இரத்தத்தைச் சிந்துவார்களா? மற்றவர்கள் இரத்தம் சிந்தினால், இவர்கள் உள்நாட்டுக் கலகத்தை வெற்றிகரமாக நடத்துவார்கள் போலும்!

## வழி காட்டுகிறது!

இரத்தத்தைப் பற்றிய விஷயம் ஒருபுற மிருக்க, மற்றொரு சந்தோஷமான விஷயத்தைக் கவனிக்கலாம். அதுவும் ஸர் சி. பி. சம்பந்தப்பட்டதுதான். ஸர் சி. பி.யைத் திவானாகக் கொண்ட திருவாங்கூர் சர்க்கார் தங்கள் பிரஜைகளுக்குச் சில புதிய அரசியல் சீர்திருத்தங்கள் வழங்கி யிருக்கிறார்கள். அவற்றைப் பார்க்கும்போது, ஒரு வகையில் நமக்கெல்லாங்கூடப் பொறாமை உண்டாகிறது. சமஸ்தானங்கள் மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கின்றன என்ற பழிச்சொல் இதன் மூலம் நீங்கி, சமஸ்தான வாசிகள் நம்மைப் பார்த்து, "பிரிட்டிஷ் இந்தியா மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது" என்று பரிகாசம் செய்தாலும் ஆச்சரியம் இல்லை.

இந்தப் புதிய சீர்திருத்தத்தின் சில முக்கிய அம்சங்களாவன :—

1. சட்ட சபைகளில் நியமன அங்கத்தினர்களே இல்லை.
2. கீழ் சட்டசபைக்கு, வயது வந்த அனைவருக்கும் வோட்டுரிமை உண்டு.
3. மேல் சட்டசபையில் பல்வேறு தொழில்களுக்குப் பிரதிநிதித்துவம் உண்டு.
4. விசேஷ காரணம் இருந்தாலல்லாமல், சட்டசபைகளின் தீர்மானத்தின் படியே அரசாங்க நிர்வாகம் நடைபெறும்.

## காகிதப் பரி

-உம்மன்

நூறு ரூபாய்க்கு மேற்பட்ட நோட்டுகளின் செலாவணி யைக் கட்டுப்படுத்தும் புதிய சர்க்கார் சட்டம், கருப்பு மார்க்கட்டில் பெரும் பீதியை உண்டாக்கி யிருக்கிறது.



மிகவும் முற்போக்கான மேற்படி சீர்திருத்தங்களை வழங்கியதன் மூலம், திருவாங்கூர் மகாராஜாவும் திவான் ஸர் சி.பி.யும் முன்பு சமஸ்தானப் பொறுப்பாட்சி இயக்கங்களை அடக்கி ஒடுக்கியதன் மூலம் ஏற்பட்ட கெட்ட பெயரைப் போக்கிக் கொண்டு விட்டார்கள். திருவாங்கூர் சமஸ்தானம் ஆலயப் பிரவேசம் முதலிய பல துறைகளில் மற்ற சமஸ்தானங்களுக்கு வழி காட்டியாக விளங்கி யிருப்பது போல, அரசியல் சீர்திருத்தத்திலும் இப்போது ஓர் உதாரணமாக விளங்குகிறது. மேற்படி புதிய சீர்திருத்தங்கள் வெறும் கடுதாசிச் சீர்திருத்தங்களாக விளங்காமல் அவற்றைக் காரியாம்சத்தில் நிறைவேற்றி வைப்பதற்கும் மகாராஜாவும் திவானும் பாடுபடுவார்களென்று கருதுகிறோம்.

## அவரே சொல்லுகிறார்!

தமிழ் நாட்டிலே ராஜாஜி மீது கோபங் கொண்ட சிலர், அவருக்கு அதிக சிரத்தையுள்ள ஆலயப் பிரவேசத்தின் மீதும் மதுவிலக்கின் மீதும் அந்தக் கோபத்தைக் காட்டத் தொடங்கி யிருக்கிறார்கள். ராஜாஜி சுதந்தரம் வேண்டும் என்று சொல்லுகிறார் என்பதற்காக இவர்கள் சுதந்தரமே வேண்டாம் என்று கூடச் சொன்னாலும் சொல்லுவார்கள்!

கொஞ்ச நாளைக்கு முன்னால் செங்கற்பட்டிலே கூடிய அரசியல் மகாநாட்டில், 'கள்ளுக் கடையை மூடினால் போதுமா? கோவிலைத் திறந்து விட்டால் போதுமா? இதெல்லாம் யாருக்கு வேண்டும்? அரசியல் முட்டுக்கட்டை யல்லவா வேண்டும்?" என்றெல்லாம் சிலர் வீராவேசமாகப் பேசினார்கள். ஆனால், காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு தலைவரான சர்தார் வல்லபாய் படேல் சமீபத்தில் பம்பாயில் செய்த பிரசங்கத்தில், "தீண்டாமை தான் இந்தியாவின் சுதந்திரத்துக்கு இடையூறாக நிற்கிறது. இந்தத் தீண்டாமையை ஒழித்து ஹரிஜனங்களைக் காப்பாற்றும் வேலையைத்தான் காங்கிரஸ் மந்திரி சபை பதவியேற்றதும் முதல் முதலில் மேற்கொள்ளும்" என்று சொல்லி யிருக்கிறார்.

ஆலயப் பிரவேசமோ மதுவிலக்கோ ராஜாஜி புதிதாகக் கண்டு பிடித்த விஷயங்களல்ல. அவை அவருக்கு மாத்திரம் உரியனவும் அல்ல. அவை சென்ற இருபது இருபத்தைந்து வருஷங்களாகக் காங்கிரஸ் மகா சபையின் முக்கிய திட்டங்கள். ராஜாஜி மீதுள்ள கோபத்திற்காக மேற்படி திட்டங்களைத் தாக்குவது அவலை நினைத்துக் கொண்டு உரலை இடிப்பது போலாகும்.

# வருக! வருக!

இராமபிரான் தர்ம ராஜ்யம் நடத்திய காலத்தில் கோசல நாட்டில் வாழ்ந்த மக்கள் கொடுத்து வைத்த பாக்கியசாலிகள்.

பால கோபாலன் நந்த கோகுலத்தில் வளர்ந்த காலத்தில் அங்கு வாழ்ந்த ஆயர் குலத்தினர் மகத்தான அதிர்ஷ்டசாலிகள்.

அவர்களைப் போலவே இந்தக் காலத்தில் பாரத நாட்டில் வாழ்ந்திருப்பதற்குக் கொடுத்து வைத்த நாமும் பூர்வ ஜன்மத்தில் மகத்தான சுகிர்தம் செய்தவர்களாவோம்.

ஏனெனில், இந்த நாளில் காந்தி மகாத்மா இந்தப் பாரத புண்ணிய பூமியில் வாழ்ந்திருக்கிறார். அவர் வாழ்ந்திருக்கும் காலத்தில் நாமும் இந்நாட்டில் வாழ்ந்திருக்கிறோம். அவரை நேருக்கு நேர் தரிசிக்கும் பாக்கியத்தை நாம் பெற்றிருக்கிறோம்.

ஆயிரம் பதினாயிரம் வருஷமாக பாரத நாட்டில் பிறந்த உத்தம புருஷர்கள், கற்பரசிகள் எல்லாரும் செய்த தவப் பயனை ஓர் உருவமாக விளங்கும் மகா புருஷர் நம்மைத் தேடிக் கொண்டு நெடுந் தூரம் பிரயாணம் செய்து தள்ளாத வயதில் வருகிறார்.

சென்னை வாசிகள், தமிழ் மக்கள், ரொம்ப ரொம்பக் கொடுத்து வைத்த பாக்கிய சாலிகள்!

* * *

அமெரிக்கா முதலிய மேனாடுகளிலிருந்து உலக யாத்திரை கிளம்பும் அறிஞர்கள் இந்தியாவிலே மூன்று அற்புதங்களைப் பார்க்க விரும்புவதாகச் சொல்வதுண்டு. அந்த மூன்று அற்புதங்கள் :—(1) இமய மலை; (2) தாஜ் மஹால்; (3) மகாத்மா காந்தி.

மேற் கூறிய மூன்று அற்புதங்களில் இமய மலையும் தாஜ் மஹாலும் இடம் பெயர்ந்து வரமாட்டா. அவை உள்ள இடத்துக்கு நாம் போய்ப் பார்த்தால் தான் உண்டு. ஆனால் மூன்றாவது அற்புதமாகிய மகாத்மா காந்தியோ நம் இருப்பிடத்தைத் தேடி நம்மைப் பார்ப்பதற்காக வருகிறார். எத்தனையோ பிரயாண இடைஞ்சல்களையும், எத்தனையோ தேக சிரமங்களையும் பொருட்படுத்தாமல் நம் பேரில் உள்ள அன்பு காரணமாகவே வருகிறார்.

அப்படி வருகிற உத்தம புருஷரை நாம் எப்படி வரவேற்பது என்று நினைக்கும்போது நமக்குத் திகைப்பாயிருக்கிறது. சம்பிரதாயமாகக் கூறும் வரவேற்பு மொழிகளும் நல்வரவு உபசாரங்களும் காந்தி மகாத்மாவின் விஷயத்தில் பொருளற்றுக் காணப்படுகின்றன.

இருதயத்தில் உணர்ச்சி நிறைந்து பொங்கும்போது, கேவலம் வாய் வார்த்தைகளோ, உயிரற்ற எழுத்துக்களோ அந்த உணர்ச்சியை எவ்விதம் வெளிப்படுத்த முடியும்?

* * *

ஒன்பது வருஷங்களுக்கு முன்னால் நமது ஒப்பற்ற தலைவர் மகாத்மா காந்தி சென்னைக்கு விஜயம் செய்தார். இன்றைக்கு மறுபடியும் நமது நகருக்கு விஜயம் செய்கிறார். இம்முறை, அடிகளின் சென்னை விஜயத்துக்குக் காரணமாயிருப்பது ஹிந்தி பிரசார சபையின் வெள்ளி விழாவாகும்.

இருபத்தைந்து வருஷத்துக்கு முன்னால் மகாத்மாவின் கடைக்குட்டிப் புதல்வர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தந்தையின் கட்டளைக் கிணங்கத் தென்னாட்டுக்கு வந்து ஹிந்தி பிரசார முயற்சிக்கு அடிகோலிவிட்டுப் போனார்.

அவர் அன்று விதைத்த விதை செடியாகி, பெரிய விருட்சமாக வளர்ந்து இன்று கிளைகளும் தழைகளுமாய்ப் படர்ந்து விளங்குகிறது.

தென்னாட்டில் ஆயிரம், பதினாயிரம் என்ற கணக்கில் ஜனங்கள் ஹிந்தி பிரசார சபையின் முயற்சியினால் ஹிந்தி கற்றுக்கொண்டு ஹிந்தி பாஷை பேசவும், எழுதவும், ஹிந்தி பாஷைப் பேச்சுக்களைப் புரிந்து கொள்ளவும் சக்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

இமய மலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் பாரத தேசம் ஒரே தேசமாகவும், பாரத மக்கள் ஒரு நாட்டு மக்களாகவும் ஒற்றுமை யுணர்ச்சியுடன் வாழ்வதற்காக ஹிந்தி பாஷையைத் தேசப் பொது பாஷையாக்க வேண்டுமென்பதாக மகாத்மா பல ஆண்டுகளுக்கு முன்பே முடிவு செய்தார்.

அவருடைய எண்ணத்தை ஹிந்தி பிரசார சபையார் அமோகமாக நிறைவேற்றி வருகிறார்கள்.

ஹிந்தி பிரசார சபையின் இருபத்தைந்தாவது வருஷ பூர்த்தி வெள்ளி விழாவில் தலைமை வகித்து அந்தச் சபையின் முயற்சிகளுக்கு ஆசி கூறுவதற்காகவே மகாத்மா இம் முறை சென்னைக்கு வருகிறார்.

எனவே, மகாத்மாவின் சென்னை விஜயத்துக்கு ஹிந்தி பிரசார சபையாரே காரணமாகின்றனர்.

இப்பேர்ப்பட்ட பாக்யெத்தை நமக்கு ஹிந்தி பிரசார சபையார் அளிக்கிறார்கள் என்ற ஒரு காரணத்தை முன்னிட்டே அச் சபையாரின் முயற்சிகளுக்குத் தமிழ் மக்கள் பூரண ஆதரவு நல்குதல் தகும். அதற்காகவே நாம் ஹிந்தி பாஷை கற்றுக் கொள்ளுவதும் முறையாகும்.

• • •

காந்தியடிகள் இப்போது எண்பதாவது பிராயத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறார்.

எத்தனையோ தடவை தேசத்துக்காக உண்ணாவிரதம் இருந்தும், எத்தனையோ கடுமையான வேறு விரதங்களை அனுஷ்டித்தும், எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்தும் மகாத்மாவின் தேகம் மிகவும் துர்ப்பலமாகியிருக்கிறது.

எனினும், மகாத்மா காந்தி 125 ஆண்டு உயிர் வாழ விரும்புகிறார்.

இந்த உலக வாழ்க்கையில் உள்ள பற்றினாலோ அல்லது இந்தப் பொய் உலகின் அற்ப சுகபோகங்களை அநுபவிக்கும் ஆசையினாலோ மகாத்மா 125 வருஷம் உயிர் வாழ விரும்பவில்லை.

பாரத மக்களுக்கு மேலும் மேலும் தொண்டு செய்யவும், பாரத நாட்டில் தற்சமயம் உள்ள குற்றங் குறைகள் தீமைகள் எல்லாவற்றையும் போக்கி இந்த நாட்டை உண்மையிலேயே புண்ணிய பூமியாக்கவும் அவர் அவ்விதம் நீடித்த ஆயுளைக் கோருகிறார்.

அவருடைய கோரிக்கைக்குப் பங்கம் நேரும்படியான காரியம் எதையும் நாம் செய்யக் கூடாது.

அப்படி என்னென்ன செய்யக் கூடாது என்று கேட்டால் :—

(1) குறிப்பிட்ட காலங்களில், குறிப்பிட்ட இடங்களிலே தவிர, அவரைப் பார்ப்பதற்காகச் சென்று கூட்டம் போடக் கூடாது.

(2) மகாத்மாவைப் பார்க்கப் போகும் சந்தர்ப்பங்களில் வெறுங் கூச்சல் கிளப்பக் கூடாது.

(3) மகாத்மாவை அருகில் போய்ப் பார்க்க வேண்டும் என்பதற்காகக் கூட்டத்தில் ஒருவரை யொருவர் நெருக்கி யடித்துக்கொண்டு மேடையை நோக்கி ஓடக் கூடாது.

(4) மகாத்மா ஓரிடத்திலிருந்து இன்னொரிடம் போகும்போது அவரைத் தொடர்ந்து நாமும் போகக் கூடாது.

(5) மகாத்மா ரயில் பிரயாணம் செய்யும்போது, முக்கியமாக இரவு நேரங்களில் ஸ்டேஷன்களில் கூட்டம் கூடிக் கோஷம் செய்யக் கூடாது. ரயில் ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்க முயலக் கூடாது.

(6) மகாத்மாவின் விஜயம் சம்பந்தமாக ஒழுங்கை நிலை நாட்டுவதற்காக நியமிக்கப்படும் தொண்டர்களை மீறக் கூடாது; அவர்களோடு சண்டை பிடிக்கக் கூடாது.

மகாத்மாவுக்கும் தமிழ் நாட்டுக்கும் உள்ள தொடர்பு வெகு நாளைய தொடர்பாகும். தென்னாப்பிரிக்காவில் மகாத்மா நடத்திய சத்தியாக்கிரஹப் போரில் தமிழர்கள் முன்னணியில் நின்றார்கள்.

மகாத்மா பாரத நாட்டின் தலைமையை ஏற்றதிலிருந்து அவர் ஆரம்பித்த இயக்கம் ஒவ்வொன்றிலும் தமிழ்நாடு முதன்மையாக நின்றிருக்கிறது.

ஒத்துழையாமைப் போர், உப்பு சத்தியாக்கிரஹப் போர், தனி நபர் சத்தியாக்கிரஹப் போர், கதர்த் திட்டம். விடுதலைத் திட்டம், மதுவிலக்குத் திட்டம், அடிப்படைக் கல்வித் திட்டம், சட்ட சபையைக் கைப்பற்றும் திட்டம் ஆகிய ஒவ்வொன்றிலும் தமிழ் நாடு மற்ற மாகாணங்களுக்குப் பின்னிடாமல் முன்னணியிலேயே நின்று வருகிறது.

இதனாலெல்லாம் மகாத்மாவுக்குத் தமிழ் நாட்டின்மீது தனிப்பட்ட அன்பும் நன் மதிப்பும் உண்டு.

அந்தப் புனிதமான அன்புக்கும் நன் மதிப்புக்கும் எந்த வகையிலும் பங்கம் நேராத முறையில் தமிழ் மக்கள் மகாத்மா விஜயத்தின்போது நடந்து கொள்ளவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். அவ்விதம் நடந்து கொள்வார்கள் என்று உறுதியாக நம்புகிறோம்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஆர். அம்புஜா ரகுநாத், C/o வர்த்தகர் பாங்க் கேடன்ஸ் ரோடு, தஞ்சாவூர்.

# ஆண்டவனுக்கு அர்ப்பணம்!

சாவி

மிஸ்டர் மலைவிழுங்கி அன்று காலையில் வந்த தினசரிப் பத்திரிகையை வாங்கிப் புரட்டினார். என்ன ஆச்சரியம்! அதில் வெளியாகியிருந்த ஒரு செய்தியை வரிக்கு வரி படித்துக் கொண்டு வந்தபோது அவருடைய இருதயம் 'படக், படக்' கென்று அடித்துக் கொண்டது. கொஞ்ச நேரத்துக் கெல்லாம் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தார்.

அப்படிப்பட்ட செய்தி என்ன தெரியுமா? வேறு ஒன்றுமில்லை. நூறு ரூபாய் நோட்டு முதல் பத்தாயிரம் ரூபாய் நோட்டு வரையில் எல்லா நோட்டுகளையும் இந்திய சர்க்கார் பொதுச் செலவாணியிலிருந்து அவசரச் சட்டத்தின் மூலம் தடை செய்திருந்தார்கள். மிஸ்டர் மலை விழுங்கியிடம் அந்த சமயம் நூறு ரூபாய்க்குமேல் ஆயிரம் ரூபாய் நோட்டுகளாகவே இருந்தன.

இதை நினைத்தபோது மலை விழுங்கிக்கு மயக்கம் வராமல் என்ன செய்யும்? மூர்ச்சை தெளிந்து எழுந்ததும் ஒரு நிமிஷம் பதைத்தார்; மறு நிமிஷம் திகைத்தார்.

"ஐயோ, ஆண்டவனே!" என்று சொல்லிக் கொண்டே கையிலிருந்த பத்திரிகையைக் கீழே போட்டுவிட்டு இரும்புப் பெட்டியண்டை ஓடினார். பெட்டியைத் திறந்து அவ்வளவு நோட்டுக்களையும் வாரி நாலா பக்கமும் இறைத்தார்.

ஆ! போச்சு; அவ்வளவு பணமும் போச்சு. எல்லாம் அழகான நோட்டுகள். சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த கண்ணைக் கவரும் காகிதங்கள்! ஆயிரம், பதினாயிரம், லட்சம்! எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து ஒரு தராசில் வைத்து எடை போட்டார். சரியாக இரண்டு மணக்கு மூன்று வீசை நோட்டுகள் இருந்தன. அவ்வளவையும் வைத்துக்கொண்டு என்ன செய்வது? வீசைக் கணக்கில் எடை போட்டுக் காகித விலைக்கு நிறுத்துக் கொடுத்து விடலாமா என்று ஒரு கணம் யோசித்தார். சேச்சே! அதைவிட அவ்வளவு நோட்டுகளையும் அடுப்பில் எரித்து வெந்நீர் காய்ச்சி ஆனந்தமாய் ஸ்நானம் செய்யலாம்.

மிஸ்டர் மலை விழுங்கி நோட்டுக்களை என்ன செய்வது என்பது பற்றி இரண்டு தினங்கள் ஆர அமர யோசித்தார். சர்க்கார் அறிக்கைப்படி, நியாயமாகச் சம்பாதித்த பணமாயிருந்தால், சர்க்காருக்கு விவரம் அறிவித்துப் பணத்தை மாற்றிக் கொள்வதற்கும் உரிமை இருந்தது. ஆனால் மலை விழுங்கி வைத்திருந்தது கள்ள மார்க்கெட் பணம் ஆனதால் சர்க்காரிடம் தெரிவிக்க முடியாமல் திருடனுக்குத் தேள் கொட்டிய மாதிரி தத்தளித்தார்.

கடைசியில் வேறு வழி ஒன்றும் தோன்றாமல் போகவே, அவ்வளவு நோட்டுக்களையும் தான தருமங்கள் செய்து தாம் ஒரு பெரிய கொடையாளி என்றாவது பெயர் வாங்கலாம் என எண்ணினார். எனவே, நோட்டுக்களை மூட்டை கட்டிக் கொண்டு போய் ஒவ்வொரு தர்ம ஸ்தாபனமாகச் சென்றார். ஆனால், யாரும் பணத்தை வாங்கிக் கொள்ளவில்லை.

"ஐயோ! இரண்டு நாளைக்கு முன்பே வந்திருக்கக்கூடாதா? தாராளமாய் வாங்கிக் கொண்டிருப்போமே! இப்போது சர்க்கார் உத்தரவு வந்து விட்டதே?" என்று வருத்தப்பட்டுத் திருப்பி அனுப்பி விட்டார்கள்.

இ. தே. கா. நிதியிலாவது சேர்த்துவிடலாம் என்று அங்கேயும் கொண்டு போய்க் கொடுத்துப் பார்த்தார். ஊஹூம்; அவர்களும் 'காலம் கடந்து விட்டது' என்று சொல்லி மறுத்துவிட்டார்கள்.

அப்புறம்தான், கடைசி கடைசியாக மலை விழுங்கியின் அபூர்வ மூளைக்கு ஒரு அபார யோசனை உதயமாயிற்று! "ஈசுவரோ ரட்சது!" என்ற முடிவுக்கு வந்தார்!

மறு நாளே மலைவிழுங்கி, மஞ்சள் வஸ்திரம் தரித்து நோட்டுகள் அவ்வளவையும் சுருட்டி எடுத்துக் கொண்டு திருப்பதிக்குக் கிளம்பினார். ஏழு மலைகளையும் ஏறி வெங்கடாசலபதியின் [illegible]தானத்திலிருந்த உண்டியலில் [illegible] நோட்டுக்களையும் போட்டார். "ஆண்டவனே உனக்கே அர்ப்பணம்!" என்று கூறிவிட்டுத் திரும்பும் போது தம் தலையையும் மழுக்க மொட்டை அடித்துக் கொண்டு நிம்மதியாக வந்து சேர்ந்தார்!



# சிவகாமியின் சபதம்

கல்கி



## அத்தியாயம் 16

## எப்போ வருவாரோ?

காஞ்சி பல்லவ சக்கரவர்த்தியின் அரண்மனை மிக மிக விஸ்தாரமானது. அது மூன்று பெரிய பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. மூன்று பகுதிகளுக்கும் வெளிவாசல் அரண்மனையின் முன்புறத்து நிலா முற்றத்தில் வந்து சேர்ந்தன. மூன்று பகுதிகளுக்கும் பின்னால் விசாலமான அரண்மனைப் பூங்காவனம் இருந்தது.

மூன்றுக்கும் நடுநாயகமான பகுதியில் மாமல்ல சக்கரவர்த்தி தமது பட்டமகிஷியுடன் வசித்து வந்தார். வலது புறத்து மாளிகையில் புவனமகாதேவியும் மகேந்திரபல்லவருடைய மற்றும் இரு பத்தினிகளும் வசித்தார்கள். இடது புறத்து மாளிகை, அரண்மனைக்கு வரும் முக்கிய விருந்தாளிகளுக்காக ஏற்பட்டது. அந்த மாளிகையில் தற்சமயம் இலங்கை இளவரசர் தமது மனைவியுடன் வசித்து வந்தார். ஒவ்வொரு மாளிகையை ஒட்டியும் அரண்மனைக் காரியஸ்தர்கள், காவலர்கள் முதலியோர் வசிப்பதற்குத் தனித்தனி இடங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

முறையே, 'சரஸ்வதி நிவாஸம்', 'லக்ஷ்மி நிவாஸம்', 'சக்தி நிவாஸம்' என்று பெயர் தரப்பட்டிருந்த மேற்கூறிய மூன்று மாளிகைகளையும் ஒன்றோடொன்று இணைத்த மச்சுப் பாதைகளும் தரைப் பாதைகளும் சுரங்கப் பாதைகளும் இருந்தன.

* * *

சோழன் செம்பியன் மகளை புவன மகாதேவி தமது புதல்வியாகக் கருதிப் பாதுகாத்து வருவதாக வாக்களித்திருந்தார் என்று சொன்னோமல்லவா? அந்த வாக்கை அவர் பரிபூரணமாக நிறைவேற்றி வந்தார். அரண்மனையில் இருந்தாலும், வெளியே கோயில்கள் அல்லது மடங்களுக்குச் சென்றாலும், மங்கையர்க்கரசியைச் சதா சர்வ காலமும் அவர் தம் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருந்தார்.

சரித்திரப் பிரசித்தி பெற்ற மகேந்திர பல்லவரைப் போலவே அவருடைய பட்டமகிஷி புவன மகாதேவியும் சிவ பக்தியிற் சிறந்தவர். சக்கரவர்த்தி சிவ பதம் அடைந்த பிறகு அவர் தமது காலத்தைப் பெரும் பாலும் சிவபூஜையிலும் சிவபுராணங்களின் படனத்திலும் கழித்து வந்தார். அவருடைய அரண்மனையில் ஒரு அறையில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து தினந்தோறும் ஆகம விதிகளின்படி அவர் பூஜை செய்வதுண்டு. இந்தச் சிவபூஜைக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் உரிமையை மங்கையர்க்கரசி வருந்திக் கோரிப் பெற்றிருந்தாள். மேற்படி பணிவிடைகளை மிக்க பக்தி சிரத்தையுடன் நிறைவேற்றி வந்தாள். முன்பின் அறியாதவர்கள் அடங்கிய அந்தப் பிரம்மாண்டமான அரண்மனையில் மங்கையர்க்கரசி பொழுது போக்குவதற்கு அத்தகைய பூஜா கைங்கரியங்கள் சிறந்த சாதனமாயிருந்தன.

மாமல்லர் படையுடன் கிளம்பிச் சென்று மூன்று தினங்கள் வரையில் தான் அவ்விதம் எல்லாம் ஒழுங்காக நடந்தன. நாலாவது நாள் புவனமகாதேவியும் மங்கையர்க்கரசியும் திருநா

வுக்கரசரைத் தரிசித்து விட்டு வந்தார்கள் அல்லவா? அன்று முதல் மங்கையர்க்கரசியின் கவனம் சிறிது சிதறிப்போய் விட்டது. தேவியார் சிவ பூஜை செய்ய அமர்ந்த பிறகு, புஷ்பம் வேண்டிய போது சந்தனத்தையும், சந்தனம் வேண்டியபோது தூபத்தையும், தூபம் கேட்டால் பிரஸாதத்தையும் மங்கையர்க்கரசி எடுத்துக் கொடுக்கலானாள்.

இதையெல்லாம் கவனித்த புவன மகாதேவி பூஜை முடிந்த பிறகு, "குழந்தாய்! இன்றைக்கு என்ன ஒரு மாதிரி சஞ்சலம் அடைந்திருக்கிறாய்? தகப்பனாரை நினைத்துக் கொண்டு கவலைப்படுகிறாயா? என்னைப் பார்த்துக்கொள், குழந்தாய்! என்னுடைய ஏக புதல்வனைப் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டு நான் நிம்மதியாக இருக்கவில்லையா?" என்று தைரியம் கூறினார்.

அப்போது மங்கையர்க்கரசி சிறிது நாணத்துடன், "இல்லை, அம்மா! அப்படியெல்லாம் கவலை ஒன்றுமில்லை!" என்றாள்.

"பின் ஏன் உன்முகத்தில் சிந்தனைக்கு அறிகுறி காணப்படுகிறது? இந்த அரண்மனையில் வசிப்பதில் ஏதாவது உனக்குத் தொந்தரவு இருக்கிறதா?" என்றார் மகேந்திரரின் மகிஷி.

"தொந்தரவா? இவ்வளவு சௌக்கியமாக நான் என் தந்தையின் வீட்டிலே ஒருநாளும் இருந்ததில்லை, தேவி! என் மனதிலும் சஞ்சலம் ஒன்றுமில்லை. நாவுக்கரசர் பெருமானோடு தாங்கள் வார்த்தையாடிக் கொண்டிருக்கையில், வாலிபர் ஒருவர் வந்தாரல்லவா? அவரை எங்கேயோ ஒருமுறை பார்த்த ஞாபகமாயிருந்தது. அதைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன், அம்மா! வேறொன்றுமில்லை" என்று மங்கையர்க்கரசி கூறினாள்.

"அவன் பாண்டிய நாட்டான், குழந்தாய்! அவனை நீ பார்த்திருக்க முடியாது. அவனைப் போல் வேறு யாரையாவது பார்த்திருப்பாய்! அப்படி உனக்குச் சந்தேகமாயிருந்தால், அவனே எப்படியும் இன்னும் இரண்டு மூன்று நாளில் பாண்டிய குமாரனுடன் இவ்விடம் வருவான். அவனிடமே கேட்டுத் தெரிந்து கொண்டால் போயிற்று!" என்றார் சக்கரவர்த்தினி.

• • •

குலச்சிறையாரை எங்கேயோ பார்த்த நினைவாயிருந்தது என்று புவனமகாதேவியிடம் மங்கையர்க்கரசி கூறியது என்னவோ உண்மைதான். ஆனால் அது சம்பந்தமான முழு உண்மையையும் அவள் கூறவில்லை. விஷயம் என்னவென்பதை வாசகர்கள் அறிந்தால், மங்கையர்க்கரசி அவ்விதம் முழு உண்மையையும் கூறாதது பற்றி அவள் மீது குறை சொல்ல மாட்டார்கள். பூஜை வேளையில் மெய்மறந்து ஞாபகத் தவறாகக் காரியங்கள் செய்தது பற்றியும் அவ்வளவு வியப்படைய மாட்டார்கள்.

இரண்டு வருஷத்துக்கு முன்னால் நடந்த சம்பவம். கார்காலத்தில் ஒரு நாள் சாயங்காலம் விடாமழை பெய்து கொண்டிருந்தது. மங்கையர்க்கரசியும் அவளுடைய தந்தையும் அவர்களுடைய பூர்விகமான சிதிலமடைந்த அரண்மனைக்குள்ளே பொழுது போவதற்காகச் சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்தார்கள். மங்கையர்க்கரசிக்கு அப்போது வெளி உலகத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. புராதனப் பெருமை வாய்ந்த சோழ வம்சத்தைச் சேர்ந்தவர் தன் தந்தை என்பதும், அந்தப் பழைய பெருமையைத் தவிர மற்றப்படி இராஜ்யமோ குலதனமோ தங்களுக்கு இல்லை என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தது. தன்னைப் பெரிய இராஜ வம்சத்தைச் சேர்ந்த பிள்ளைக்குக் கலியாணம் செய்து கொடுக்க வேண்டுமென்ற ஆசை தன் தந்தைக்கு உண்டு என்பதும் அவளுக்குத் தெரியும். ஆனால் அது நிறைவேற முடியாத வீண் ஆசை என்றும் அவள் உணர்ந்திருந்தாள். இதைப் பற்றித் தந்தையிடம் வாக்குவாதம் செய்வதால் அவருடைய மனம் புண்படுவதைத் தவிர வேறு பயன் விளையாது என்றும் அவள் அறிந்திருந்தபடியால், தந்தை தன் கலியாணத்தைப் பற்றிப் பேசும் போதெல்லாம் மறுமொழி சொல்லாமல் கேட்டுக்கொண்டிருப்பது வழக்கம்.

அன்றைய தினம், 'சோ' என்று மழை கொட்டிக்கொண்டிருந்த சமயம் அந்தப் பழைய காலத்து மாளிகையின் வாசலில் இரண்டு குதிரைகள் வந்து நின்றன. அந்த நேரத்தில் தங்கள் வீட்டுக்கு யார் வந்திருக்கக் கூடும் என்ற வியப்புடன் தந்தையும் மகளும் சதுரங்கத்தை நிறுத்தி முன் வாசற் பக்கம் போய்ப் பார்த்தார்கள். குதிரைகளின் மீதிருந்து இரண்டு வாலிபர்கள் இறங்கினார்கள். மழையினால் சொட்டச் சொட்ட நனைந்த ஆடைகளுடன் அவர்கள் மாளிகை வாசலை நெருங்கி வருவது கண்ட மங்கையர்க்கரசி சற்றுப் பின்னால் சென்று தூண் மறைவில் ஒதுங்கி நின்றாள்.

வந்த வாலிபர்களில் ஒருவன் செம்பியன் வளவனைப் பார்த்து, "ஐயா! நாங்கள் பாண்டிய நாட்டைச் சேர்ந்த வர்த்தகர்கள். திரும்பி எங்கள் நாட்டுக்குப் போகிறோம். பெரு மழையில் வெகு தூரம் பிரயாணம் செய்து நாங்களும் எங்கள் குதிரைகளும் மிகவும் களைத்துப் போனபடியால் இன்றிரவு இவ்வூரில் தங்கிப் போக விரும்பினோம். தங்களுடைய விருந்தோம்பல் குணத்தைப் பற்றி ரொம்பவும் கேள்விப்பட்டுத் தங்கள் மாளிகையைத் தேடி வந்தோம்!" என்றார்.

எந்தக் காரணத்தினாலோ தெரியாது, செம்பியனுக்கு அந்த வாலிபர்களுடைய தோற்றம் அவ்வளவாகப் பிடிக்கவில்லை. எனவே, சாதாரணமாய் அதிதிகளை வரவேற்று உபசரிப்பதில் மிகப் பிரியம் உள்ள செம்பியன் வழக்கத்துக்கு மாறாக, "உங்களுடைய நிலைமை இரக்கத்தை உண்டாக்குகிறது. இருந்தபோதிலும், உங்களை வரவேற்று உபசரிப்பதற்கு வேண்டிய வசதிகள் தற்சமயம் இந்த வீட்டில் இல்லையே யென்று பார்க்கிறேன். இங்கிருந்து ஒரு நாழிகை தூரத்தில் தர்ம சத்திரம் இருக்கிறது........." என்று இவ்விதம் சொல்லிக் கொண்டிருந்தபோது, தந்தை பேசுகையில் என்றைக்கும் குறுக்கே பேசி அறியாத மங்கையர்க்கரசி அன்று முதல் முறையாகக் குறுக்கிட்டுப் பேசினாள்:—

"அப்பா! இந்த மழைக் கால் இருட்டில் இவர்கள் மேலும் எப்படிப் பிரயாணம் செய்வார்கள்? நம்முடைய வீட்டில் இருக்கும் கூழோ கஞ்சியோ இவர்களும் சாப்பிட்டு விட்டு இன்றிரவு இங்கே இருந்து போகட்டுமே?" இப்படி மகள் குறுக்கிட்டுக் கூறியது செம்பியனுக்குப் பெரு வியப்பையும் சிறிது எரிச்சலையும் அளித்தது. எனினும், தன் மனோ நிலையை வெளியில் காட்டிக் கொள்ளாமல் மகளையும் வந்தவர்களையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம் "இவர்களுக்குச் சம்மதமானால் எனக்கும் சம்மதந்தான், அம்மா!" என்றான் செம்பியன்.

சொட்டச் சொட்ட நனைந்த துணிகளுடனே வாசற்படிக் கருகில் நின்ற வாலிபர்களில் இன்னொருவன், "கரிகாலச் சோழன் வம்சத்தில் உதித்த செம்பியன் வளவரின் அரண்மனையில் கூழும் கஞ்சியும் அளித்தாலும் தேவாமிர்தத்துக்குச் சமானம் அல்லவா?" என்று சொல்லிக்கொண்டே வீட்டுக்குள் நுழைந்து, தூண் மறைவிலிருந்து சற்று வெளியே வந்திருந்த மங்கையர்க்கரசியை நன்றி ததும்பிய கண்களால் பார்த்தான். அந்தப் பார்வையானது மங்கையர்க்கரசி அதுநாள் வரையில் அநுபவித்திராத உள்ளக் கிளர்ச்சியை அவளுக்கு அளித்தது.

அன்றிரவு வெகு நேரம் வரையில் அந்தப் புராதன சோழ குல மாளிகையில் ஒரே கோலாகலமாயிருந்தது. வெகு காலமாக அந்தப் பழைய அரண்மனையில் கேட்டிராத குதூகலச் சிரிப்பின் ஒலி அன்றிரவு கல கல வென்று எழுந்தது. அதிதிகளாக வந்த வாலிபர்கள் இருவரும் இணையற்ற சாதுர்யத்துடன் வேடிக்கை வேடிக்கையாகப் பேசினார்கள். அவர்களுக்குச் சிறிதும் சளைக்காமல் செம்பியன் வளவனும் தனது மூதாதையர்களின் வீர தீரச் செயல்களைப் பற்றிய கதைகளைக் கூறினான். இடையிடையே மங்கையர்க்கரசியும் அவர்களுடைய சம்பாஷணையில் கலந்து கொண்டாள்.

இதற்கெல்லாம் மத்தியில், முதலில் வீட்டிற்குள் பிரவேசித்த வாலிபனுடைய கண்களும் மங்கையர்க்கரசியின் கண்களும் பிறரால் அறிய முடியாத இரகசிய தேவ பாஷையில் அடிக்கடி பேசிக்கொண்டன. அவை

என்ன பேசிக்கொண்டன என்று யாரால் சொல்லமுடியும்? ஒருவேளை, எத்தனையோ பூர்வ ஜன்மங்களில் அவ்விருவருக்கும் ஏற்பட்டிருந்த உறவுகளைப் பற்றிய விருத்தாந்தங்களைப் பரஸ்பரம் நினைவூட்டி ஒத்துப் பார்த்துக் கொண்டிருந்தல் கூடும்.

சம்பாஷணையின் நடுவே ஒரு தடவை வாலிபர்களில் ஒருவன், "ஐயா! தங்கள் குமாரிக்குக் கலியாணம் ஆகிவிட்டதா?" என்று கேட்டான். "இன்னும் ஆகவில்லை" என்று செம்பியன் கூறியதும், அந்த வாலிபன் கடைக்கண்ணால் மங்கையர்க்கரசியைப் பார்த்தவண்ணம், "எங்கள் இருவருக்கும்கூடக் கலியாணம் ஆகவில்லை; நாங்கள் இன்னும் பிரம்மசாரிகள்



தான்!" என்றான். அதைக் கேட்ட மங்கையர்க்கரசி நாணப் புன்னகையுடன் தலைகுனிந்தாள். ஆனால் செம்பியனுக்கு மேற்கூறிய வேடிக்கைப் பேச்சு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. முகத்தில் கடுகடுப்புடன் அவன், "மங்கையர்க்கரசி என்னுடைய ஏக புதல்வி. சோழ வம்சத்தை விளங்க வைப்பதற்கு இவள் ஒருத்திதான் இருக்கிறாள். பிரபல இராஜவம்சத்தைச் சேர்ந்த இராஜ குமாரனுக்குத்தான் இவளைக் கலியாணம் செய்து கொடுப்பேன். அது சாத்தியப்படாவிட்டால் இவள் கன்னிகையாகவே இருந்து காலங்கழிக்கட்டும்!" என்று கண்டிப்பான குரலில் கூறினான்.

மகளின் கலியாணத்தைப் பற்றிய பேச்சு செம்பியனுக்குத் திருப்தியளிக்கவில்லை யென்று கண்டதும் அந்த வாலிபர்கள் அதைப் பற்றிப் பேசுவதை நிறுத்தி விட்டார்கள். பெரியவருக்கு உவகை தரக்கூடிய விஷயங்களையே பேசினார்கள்.

மறுநாள் பொழுது விடிந்து மங்கையர்க்கரசி கண்விழித்து எழுந்தபோது, அன்றைக்கும் பலமாக விடா மழை பெய்து பிரயாணிகள் இருவரும் புறப்பட முடியாமல் செய்யக் கூடாதா என்று விரும்பினாள். அதற்கு மாறாக மழை அடியோடு நின்று போய் நிர்மலமான வானத்தில் சூரியன் பளிச்சென்று உதயமானான். சற்று நேரத்துக் கெல்லாம் அந்த வாலிபப் பிரயாணிகள் புறப்பட வேண்டி வந்தது. முதல் நாள் இரவு மங்கையர்க்கரசியோடு நயன பாஷையில் பேசிய வாலிபன் புறப்படுவதற்கு முன்னால் அவளைத் தனியாகச் சந்தித்து, "உன்னை நேற்றிரவுதான் முதன் முதலாகப் பார்த்தேன். ஆயினும் எத்தனையோ வருஷ காலம் நெருங்கிப் பழகிச் சிநேகம் செய்தவர்களைப் பிரிய நேர்ந்தால் எப்படியிருக்குமோ அப்படி உன்னைப் பிரிந்து செல்லக் கஷ்டமாயிருக்கிறது. இனிமேல் என்றென்றைக்கும் உன்னை நான் மறக்கவே முடியாது என்றும் தோன்றுகிறது. நீயும் எப்போதாவது சில சமயம் என்னை நினைத்துக் கொள்வாயல்லவா?" என்று கேட்டான்.

"இது என்ன கேள்வி?" என்றாள் மங்கையர்க்கரசி. "அப்படியானால் இனிமேல் இந்தப் பக்கம் நீங்கள் வரப் போவதே இல்லையா? மறுபடி எப்போதும் என்னைப் பார்க்கவே மாட்டீர்களா?" என்று ஆத்திரத்துடனே கேட்டாள்.

"என் கண்ணே! மறுபடியும் உன்னைப் பார்க்க வருவது மட்டுமல்ல; திரும்பி வந்து உன்னை அழைத்துப் போய் என்றென்றைக்கும் என் பக்கத்திலேயே வைத்துக் கொண்டு இணை பிரியாதிருக்க விரும்புகிறேன். ஆனால் இப்படியெல்லாம் நான் ஆசைப்பட்டு என்ன பிரயோஜனம்? உன் தகப்பனார் இராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்களுக்குத்தான் உன்னைக் கலியாணம் செய்து கொடுப்பேனென்று சொல்கிறாரே?" என்று அந்த வாலிபன் கூறியபோது அவன் முகத்தில் பூத்த புன்னகை விசனத்தையும் ஏமாற்றத்தையும் காட்டியதா அல்லது அது பரிகாசப் புன்னகையா என்று சொல்ல முடியாமலிருந்தது.

மங்கையர்க் கரசியை ஒரு பக்கம் நாணமும் ஒரு பக்கம் கோபமும் பிடுங்கித் தின்றன. தலை குனிந்த வண்ணம், "அது அப்பாவின் பகற் கனவு. அதை நீங்கள் பொருட் படுத்த வேண்டாம்!" என்றாள்.

"அப்படியானால் நான் திரும்பி வரும் வரையில் நீ காத்திருப்பாயா?" என்று கேட்டான் அவ்வாலிபன்.

"கட்டாயம் காத்திருப்பேன். நிச்சயமாய் நீங்கள் வருவீர்களல்லவா?"

"நிச்சயமாய் வருவேன்!" என்றான் அவ்வாலிபன்.

"அப்பா எது வேணுமானாலும் சொல்லிக் கொண்டிருக்கட்டும். இராஜகுமாரன் யாரையும் கலியாணம் செய்து கொள்வதில்லை என்று நான் நிச்சயம் செய்திருக்கிறேன்!" என்றாள் மங்கையர்க்கரசி.

வாலிபன் கலீரென்று சிரித்துவிட்டு, "இந்த வார்த்தையை மட்டும் மறந்து விடாதே! ஒருநாள் இதை நான் உனக்கு ஞாபகப்படுத்த வேண்டி வரும்!" என்றான்.

வாலிபர் இருவரும் குதிரை மேல் ஏறிச் சென்றபோது செம்பியனும் அவன் மகளும் மாளிகை வாசலில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். வெகு தூரம் போகும் வரையில் அந்த வாலிபர்களில் ஒருவன் அவர்களைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான்.



அன்று முதல், மங்கையர்க்கரசி, "எப்போ வருவாரோ?" என்று எதிர் பார்த்த வண்ணம் நாட்களை எண்ணிக் கொண்டிருந்தாள். வருஷம் இரண்டு ஆகியும் அவர் வந்தபாடில்லை. தன்னை அடியோடு அவர் மறந்து விட்டதாக எண்ணவும் அவள் மனம் இடங் கொடுக்கவில்லை.

* * *

இதற்கிடையில் செம்பியன் வளவன் வாதாபி படையெடுப்பில் சேர்ந்து செல்வதற்காகக் காஞ்சிக்கு வந்து சேர்ந்தான். காஞ்சி அரண்மனைத் தோட்டத்தில் மங்கையர்க்கரசி தான் சில நாளாய்க் காணும் கனவைக் குறித்துத் தந்தையிடம் சொன்னாள் அல்லவா? அந்தக் கனவில் வந்த சுந்தர புருஷன் இரண்டு வருஷத்துக்கு முன்னால் விடா மழை பெய்த ஒரு நாள் மாலை தங்கள் வீட்டுக்கு வந்த வாலிபர்களில் ஒருவன்தான் என்பதை மட்டும் அவள் தெரியப்படுத்தவில்லை.

இத்தகைய மனோ நிலைமையில், திருநாவுக்கரசர் மடத்தில் தான் பார்த்த வாலிபன் அந்த இருவரில் கொஞ்சம் அடக்கத்துடன் நடந்து கொண்டவன் என்பது அவளுக்கு நினைவு வந்தது. தான் பாண்டிய நாட்டான் என்று அவன் கூறியது அவளுடைய நம்பிக்கையை உறுதிப்படுத்தியது. இவன் இப்போது மதுரை இளவரசரிடம் உத்தியோகத்துக்கு அமர்ந்திருக்கிறான் என்று அவன் வாய் மொழியி லிருந்து தெரிந்தது. அவனுடைய சிநேகிதர் என்ன ஆனார்? அவரைப் பற்றி இவனிடம் விசாரிக்க வேண்டுமென்று மங்கையர்க்கரசியின் உள்ளம் துடிதுடித்துக் கொண்டிருந்தது. எனவே, அவன் மீண்டும் காஞ்சி அரண்மனைக்குப் பாண்டிய குமாரருடன் வரப்போகிறான் என்று புவனமகா தேவி கூறியது அவளுக்கு ஓரளவு ஆறுதல் அளித்தது.



திருச்சியில் பொது மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்த கூட்டத்தில் ராஜாஜி பேசுகிறார். விளக்குவெளிச்சத்தில் எடுத்த படம்.

# திருச்சி ஜில்லாவில் ராஜாஜி சுற்றுப் பிரயாணம்

நானது ஜனவரீ 7உ முதல் 10உ வரை தலைவர் ராஜாஜி திருச்சி ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்து பல முக்கிய ஸ்தலங்களிலும், சங்கங்களிலும், பொதுக் கூட்டங்களிலும் கூடியிருந்த பதினாயிரக் கணக்கான மக்களிடையே பேசினார். ராஜாஜியின் பிரசங்கத்தைக் கேட்க ஆங்காங்கே உள்ள சங்கங்களும், பொது மக்களும் செய்திருந்த ஏற்பாடுகள் மிகவும் விசேஷமாயிருந்தன. தோரண அலங்காரங்கள், ஒலிபெருக்கிக் கருவிகள், மின்சார விளக்குகள் முதலிய சகல ஏற்பாடும் செய்திருந்தனர். பிரயாண மார்க்கத்தில் இருந்த முக்கிய கிராமங்களில் எல்லாம் தலைவரை நிறுத்தி உபசரித்தார்கள். வாலிபர் சங்கம், தொழிலாளர் சங்கம், வக்கீல்கள் சங்கம், நகர சபை, பஞ்சாயத்து போர்டு ஆகிய பல ஸ்தாபனங்கள் அளித்த வரவேற்புப் பத்திரங்களுக்கு அளவில்லை. பொதுக் கூட்டங்களில் ஜனங்களின் உற்சாகமும் 'ஜே' கோஷமும் அபரிமிதமாயிருந்தன.

7—1—46 அன்று கரூர் முனிசிபல் அங்கத்தினர்கள் மிக உற்சாகத்துடனும், பெருமிதத்துடனும் ராஜாஜியை வரவேற்று அழைத்துச் சென்று உபசாரப் பத்திரம் வாசித்து அளித்தார்கள்.



அன்று மாலை அமராவதி ஆற்றி
விஸ்தாரமான மணல் பரப்பில் ராஜா
பேசும்போது பெரும் ஜனத் திரள் குழு
யிருந்தது. பிரத்யேகமான மாணவர் கூ
டம் ஒன்றும் சிறப்பாக நடைபெற்றது.

ஜனவரி 10உ ஸ்ரீரங்கத்துக்கு விஜயம் செய்தார். அங்கே முனிசிபாலிடி அங்கத்தினர்களின் உபசாரப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டார். ஸ்ரீரங்கம் முனிசிபல் நந்தவனத்தில் கூடியுள்ள திரளான ஜனங்களையும், ராஜாஜி பேசுவதையும் படத்தில் காணுங்கள்.



திருச்சியில் அன்றிரவு நடந்த பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் ராஜாஜி பேசும் போது அவர் பேச்சில் லயித்துள்ள கூட்டத்தினரைப்போலவே இரண்டு பக்கங்களிலுமுள்ள இரண்டு மூவர்ணக் கொடிகளும் அசைவற்று ராஜாஜியின் பிரசங்கத்தில் ஈடுபட்டிருப்பதைப் படத்தில் காணலாம்.

8—1—46 அன்று ராஜாஜி குளித்தலைக்கு விஜயம் செய்தபோது அவருக்கு நெசவுத் தொழிலாளர் சங்கம், வக்கீல்கள் சங்கம், பஞ்சாயத்து போர்டு, மாயனூர் பஞ்சாயத்து போர்டு, ஹரிஜனங்கள் சங்கம் முதலிய பல சங்கங்கள் சார்பாக வரவேற்பு உபசாரப் பத்திரங்கள் வாசித்து அளித்தார்கள்.



மறுநாள் 9-1-46ல் பூவாளூர், வாளாடி, ஆங்கரை முதலிய ஊர்களின் வழியாக அரியலூர் வந்து சேர்ந்தார். பஞ்சாயத்து போர்டு, வியாபாரிகள் சங்கம், வக்கீல்கள் சங்கம், அச்சுத் தொழிலாளர் சங்கம் முதலிய பல சங்கங்கள் அளித்த உபசாரப் பத்திரங்களைப் பெற்றுக் கொண்டு பொதுக் கூட்டத்தில் பேசினார்.

# கர்ணனும் மாண்டான்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

துரோணர் இறந்த பின் கௌரவப் பட்சத்து அரசர்கள் கர்ணனைச் சேனாபதியாக அபிஷேகம் செய்தார்கள். தேர்க் குதிரைகளைச் சல்யன் நடத்திய திவ்யமான தேரின் மீது கர்ணன் ஏறி நின்றான். அவனுடைய தேஜசு மிகவும் பிரகாசித்தது. அவன் தலைமையில் மறுபடி யுத்தம் வெகு உக்கிரமாக நடந்தது. கோர யுத்தத்துக்குத் தகுந்த ஜோதிஷ நிபுணர்கள் பார்த்துச் சொன்ன ஒரு முகூர்த்தத்தை நிச்சயித்து அருச்சுனனும் அவனுக்குக் காப்பாக பீமசேனன் தன் தேரின்மேல் அடுத்தாற்போல் பின்புறம் தொடர இருவரும் சேர்ந்து கர்ணனைத் தாக்கினார்கள். துச்சாதனன் இதைக் கண்டதும் பீமனை எதிர்த்து அம்புமாரி பொழிந்தான். அன்று "சிக்கினாய், துச்சாதனா!" என்றான் பீமன், "செலுத்த வேண்டிய கடனை முதலும் வட்டியுமாக இப்போது தீர்க்கப் போகிறேன். திரௌபதியை நீ தீண்டிய போது நான் எடுத்த சபதம் இப்போது நிறைவேறப் போகிறது" என்றான். துச்சாதனன் செய்த அக்கிரமங்களை நினைவுக்குத் தந்து கொண்டு கோபம் மேலிட்டு பீமன் அவன்மேல் பாய்ந்தான்.

திரௌபதியை அவமதித்த பாபிஷ்டனை பூமியில் தள்ளி அவன் அங்கங்களைப் படபடவென்று ஒடித்தான். "துன்மார்க்கனே! இந்தக் கையல்லவோ திரௌபதியின் தலைக் கூந்தலைப் பிடித்தது! அந்தக் கையை உடலிலிருந்து பிய்த்து எறியப் போகிறேன். உனக்கு உதவியாக யாரேனும் இப்போது வரட்டும்! உன்னைக் காப்பாற்றும் திறமை வாய்ந்தவர் யாரேனும் இருந்தால் வரலாம்" என்று துரியோதனனுக்குக் கேட்குமாறு சொல்லிக் கோபபரவசமாய்த் துச்சாதனனுடைய கையைப் பிடித்து இழுத்து எறிந்தான். பிறகு அவனுடைய ரத்தத்தை உறிஞ்சிக் குடித்து பீமசேனன் காட்டு மிருகத்தைப்போல் மிக்க கோரமான காட்சியைத் தந்தான்.

"முடித்தேன்! இந்தப் பாபியைக் குறித்துச் செய்யப்பட்ட சபதம் நிறைவேறிற்று. இனி இந்த துரியோதனனைப் பற்றியது எஞ்சி நிற்கிறது. அந்த யாகப் பசுவும் தயாராகட்டும்" என்று சொல்லி பீமசேனன் யுத்தகளத்தில் யம சொரூபமாகத் தாண்டவம் ஆடினான். இந்தக் கோரக் காட்சியைப் பார்த்து அனைவரும் நடுங்கினார்கள். கர்ணனும் பயந்து நடுங்கினான். சல்யன் கர்ணனைத் தேற்றினான். "இது தீரனான உனக்குத் தகாது. துரியோதனன் மனமுடைந்து நிற்கும் போது நீயும் தைரியத்தை இழக்கலாகாது. துச்சாதனன் இறந்த பின் உன்னைத்தான் அனைவரும் நம்பியிருக்கிறார்கள். முழுப் பொறுப்பும் பாரமும் இப்போது நீ தாங்கவேண்டும். க்ஷத்திரிய தருமத்தை நடத்து. அருச்சுனனைத் தாக்கி வெற்றியோ சுவர்க்கமோ பெறுவாயாக" என்றான்.

தன் தேரை ஓட்டிய சல்யன் சொன்னதைக் கேட்ட கர்ணன் கண்கள் சிவந்து கோபாவேசமாய் அருச்சுனனைத் தாக்கச் சென்றான்.

* * *

"இந்த யுத்தம் போதும். இனி விரோதத்தை நிறுத்துங்கள். துரியோதனா! என் அப்பனே! பாண்டவர்களிடம் சமாதானம் செய்து கொள். யுத்தத்தை நிறுத்து" என்றான் அசுவத்தாமன். "அந்த மூர்க்கனான பீமன் காட்டு மிருகம்போல் ரத்தம் குடித்துக் கொண்டு பேசியது உன் காதில் விழவில்லையா? பக்கத்தில் இருந்தாயே? சமாதானம் ஏது? வீண் பேச்சு ஏன் பேசுகிறாய்" என்று துரியோதனன் அசுவத்தாமனுக்குச் சொல்லி விட்டு, சேனையை மறுபடி வியூகப்படுத்திப் பாண்டவர்களைத் தாக்கக் கட்டளையிட்டான்.

* * *

அருச்சுனனுக்கும் கர்ணனுக்கும் பெரும் போர் நடந்தது. விஷப் பாம்பின் வாய்போல் நெருப்பைக் கக்கும் ஒரு அம்பைக் கர்ணன் அருச்சுனன்மேல் செலுத்தினான். கிருஷ்ணன் அந்தச் சமயம் தேரைத் தன் காலால் அழுத்தி ஐந்து அங்குலம் தரையில் பதியச் செய்து அருச்சுனனைக் காப்பாற்றினான். சர்ப்பமுகாஸ்திரம் நம் அருச்சுனனுடைய கிரீடத்தைத் தூக்கிச் சென்றது. ரோஷாவேசம் கொண்ட அருச்சுனன் வில்லில் அம்பு தொடுத்தான். அச்சமயம் கர்ணனுடைய தேரின் இடப் பக்கத்துச் சக்கரம் யுத்தகளத்தில் மண்ணில் பதிந்து சிக்கிக் கொண்டது. "நில்! நில்! ரதத்தின் சக்கரம் இறங்கி விட்டிருக்கிறது. அதைத் தூக்கி நிறுத்தப் போகிறேன். பாண்டவனே, அதுவரையில் தாமதிப்பாயாக,



நீ க்ஷத்திரிய தர்மப்படி போர் நடத்துபவன் என்று பெயர் பெற்றிருக்கிறாய். அந்தப் புகழை இழந்து விடாதே. நீ ரதத்தின் மேல் இருந்து கொண்டு ரதமில்லாமல் தரையில் நிற்பவனாகிய என் மேல் பாணம் செலுத்துதல் தகாது. நான் சக்கரத்தைத் தூக்கும் வரையில் சிறிது நேரம் எனக்காக உன் போரை நிறுத்து'' என்றான்.

கர்ணன் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணன் "கர்ணனே, தருமம் என்பது உனக்கும் நினைவுக்கு வருகிறதா? கஷ்டம் நேரிட்டபோதல்லவா நீ தருமத்தைச் சிந்திக்கிறாய்? நீயும் துரியோதனனும் துச்சாதனனும் சகுனியும் திரௌபதியைச் சபைக்கு இழுத்தீர்களே, அப்போது ஏன் தருமம் என்பது உனக்குப் பிடிக்கவில்லை? சூதாட்ட சாமர்த்தியம் தெரியாத தரும புத்திரனை ஏமாற்றினீர்களே! அப்போது உன்னுடைய தருமம் எங்கே போய் மறைந்திருந்தது? பிரதிக்ஞைப்படி பன்னிரண்டு வருஷம் வனவாசமும் பதின்மூன்றும் ஆண்டு அக்ஞாத வாசமும் முடிந்தபோது யுதிஷ்டிரனுக்குச் சேர்ந்த ராஜ்யத்தைக் கொடுக்க மறுத்தது தர்மமா? அப்போது உன் தருமம் எங்கே ஒளிந்திருந்தது? பீமனை விஷமிட்டுக் கொல்லப் பார்த்த பாபிகளுடன் சதி செய்தாயே? அரக்கு மாளிகையில் தூங்கியிருந்தபோது குந்தி புத்திரர்களைச் சுட்டுக் கொல்லப் பார்த்தாயே? அப்போதெல்லாம் தருமம் எங்கே போயிற்று? திரௌபதியை அநியாயமாய் அவமதித்து அக்கிரமம் செய்த காலத்தில் நீ பார்த்துக் கொண்டிருந்து சிரித்து சந்தோஷித்தாயே? அப்போது தருமம் உனக்கு என்ன சொல்லிற்று? 'உன் புருஷர்கள் உனக்கு உதவவில்லை. வேறு புருஷனைத் தேடிக் கொள்' என்று பதிவிரதைக்கு உன் நாக்கால்

சொன்னாயே? அப்போது தருமம் எங்கே போயிற்று? பாலனான அபிமன்யுவை வெட்கமில்லாமல் சூழ்ந்து கொண்டு பலரும் சேர்ந்து கொன்றீர்களே அப்போது உன் தரும நினைவு எங்கே போயிற்று? கர்ணனே! பாவியே! தருமத்தை ஏன் இழுக்கிறாய்?" கிருஷ்ணன் இவ்வாறு சொல்லக் கர்ணன் தன் தலையைக் குனிந்து பதில் சொல்லாமல் மௌனமாக பூமியில் அழுந்தி நின்ற தேரின்மேல் நின்றே போரைத் தொடர்ந்தான். ஒரு அம்பு அருச்சுனனைத் தாக்க, அவன் சிறிதளவு அசைந்தான். அந்தச் சமயத்தை உபயோகித்துக் கர்ணன் தேரினின்று கீழே குதித்துச் சக்கரத்தைத் தூக்கப் பார்த்தான்.

தெய்வத்தால் கைவிடப்பட்ட கர்ணன் எவ்வளவு முயன்றும் சக்கரத்தைத் தூக்க முடியவில்லை.

அச்சமயம் கர்ணன் தான் பரசுராமரிடம் கற்றிருந்த அஸ்திரங்களை நினைவுக்குத் தந்துகொள்ளப் பார்த்தான். சாபத்தால் மறந்து போய் விட்டது.

"அருச்சுனனே! தாமதிக்க வேண்டாம். பாபியாகிய இந்தப் பகைவனுடைய தலையை வெட்டும்படியான அம்பைச் செலுத்து" என்று அருச்சுனனை மாதவன் அச்சமயம் தூண்டினான்.

"பிரபுவின் அந்த வார்த்தையை மதித்து அருச்சுனன் சூதபுத்திரனுடைய தலையை அம்பால் சேதித்தான்" என்கிறார் வியாசர். தரும விரோதமாக நடந்த இந்தக் காரியத்தை அருச்சுனனுடைய பொறுப்பாகவே விட்டுவிடக் கவிக்கு மனம் வரவில்லை. பகவான் கண்ணனுடைய செயலாகவே வைத்து விடுகிறார். கர்ணன் எய்த அம்பு அருச்சுனன் தலையில் விழாதபடி ரதத்தை அழுத்தியதும் கண்ணனே. மண்ணில் பதிந்து விட்டிருந்த தன்னுடைய தேர்ச் சக்கரத்தைத் தூக்கிக் கொண்டிருந்த சமயத்தில் கர்ணனைக் கொல்லச் செய்ததும் கண்ணனே — அக்காலத்து யுத்த தருமத்திற்கு இத்தகைய காரியங்கள் முற்றிலும் விரோதமாக எண்ணப்பட்டு வந்தன. அந்த பாரத்தைச் சுமக்க பகவான் கண்ணனைத் தவிர வேறு யாரால் முடியும்?

தேக பலத்தைச் செலுத்தி நடத்தும் போரின் மூலம் அதர்மங்களையும் அக்கிரமங்களையும் அடக்கலாம் என்று ஆசைப்பட்டுச் செய்யும் எத்தனங்கள் எல்லாம் வீண். தருமத்துக்காகச் செய்யும் போரிலும் அதர்மங்கள் நடந்தேதான் தீரும். அதனால் மொத்தத்தில் அதர்மமே வளரும்.



## J & N REMINDERS!

### ஞாபகக் குறிப்பு

வேலையின் வகை: சிக்கனமாக உள்வெளிப் புறங்களைப் பாதுகாக்கவோ அல்லது அலங்கரிக்கவோ வேண்டுமா?

அவசியமாக வேண்டியவை: மிகக் குறைந்த செலவில் போதிய அளவு பாதுகாப்பளிப்பதோடுகூட அலங்காரமாகவும் இருக்கக் கீழ்க்கண்டவைகளை உபயோகிக்கவும்.

"1 குடை", "2 குடை", "3 குடை" வர்ணத் தயாரிப்பு.

குடை மார்க் வார்னிஷ்

சீக்கிரம் உலர்வதோடு மர இரும்புச் சாமான்களுக்குப் பளபளப்புமளிக்க குடை மார்க் வார்னிஷ் வர்ணம்.







# JENSON & NICHOLSON

MAKERS OF PAINTS

# காலக்ஷேபம்

## நல்ல யோசனை

"இரவு ஒரு அறைக்கு வாடகை என்ன?"

"இரண்டு ரூபாய்!"

"கார் ஷெட்டுக்கு?"

"ஒன்றுமில்லை!"

"சரி, கதவைத் திறந்து விடுங்கள். இரவு முழுவதும் வண்டியிலேயே போக்கி விடுகிறேன்!"

—ஆர். ஏ. எம். நாஸ்

★

## எத்தனை கை?

"டேய்! நான் கொடுத்தேனே அந்தப் புஸ்தகத்தைத் திருப்பித் தருகிறாயா?"

"ஏன் இப்பொழுது ரொம்ப அவசரமோ? அடுத்த வீட்டு ராமுவுக்குப் படிக்கக் கொடுத்திருக்கிறேன்."

"புஸ்தகச் சொந்தக்காரனுக்குக் கொடுக்கவேண்டுமென்று என்னிடம் கொடுத்த கப்பு கேட்டான்."—எஸ். பாலசுப்ரமண்யன்.

★

## சகவாசம்

புதிதாக வேலைக்கு வந்த பையனை, குமாஸ்தா மானேஜருக்கு அறிமுகப் படுத்தினார்.

குமாஸ்தா:—பையன் பரம யோக்கியன். பொய் பித்தலாட்டம், திருட்டு, புரட்டு ஒன்றுமே கிடையாது......

மானேஜர் (குறுக்கிட்டு):—ஆ! அதற்குள் இவனுடைய யோக்கியதையைப் பற்றி நாம் எப்படி அறியமுடியும்! நம்மோடு 'பயல்' ஒரு மாதம் பழகட்டும். அப்புற(மு)ம் நல்லவனாக இருந்தால்தான் தெரியும்! —நியாகு.

★

## அவர் தவறு

ஹெட்மாஸ்டர்:—என்ன அது! பக்கத்து வகுப்பில் ஒரே கூச்சலாக இருக்கிறதே! என்ன காரணம்?

மற்றொரு ஆசிரியர் (போய்ப் பார்த்து வந்து): அதுவா! அந்த வகுப்பு உபாத்தியார் வாய் தவறி ஒரு வார்த்தை சொல்லி விட்டாராம்; அதனால்தான் அப்படி இரைச்சலாக இருக்கிறது.

ஹெட்மாஸ்டர்:—என்ன சொல்லி விட்டார் அப்படி?

மற்ற ஆசிரியர்:—ஒன்று மில்லை. பையன்களைப் பார்த்து 'நீங்கள் சப்தம் செய்யாமல் இருந்தால்தான் பாடம் நடத்துவேன்' என்றாராம்! —என். வி. வெங்கடேசன்.

## முன்யோசனை!

மனைவி:—குழந்தை 'பிராக்ரெஸ்' ரிபோர்ட்டில் நீங்கள் கையெழுத்துப் போடாமல் கை விரல் குறி ஏன் வைத்திருக்கிறீர்கள்?

கணவன்:—எழுதப் படிக்கத் தெரிந்தவனுடைய பிள்ளையா இந்த மண்டு?' என்று வாத்தியார் ஆச்சரியப்பட மாட்டார் அல்லவா? —அம்மணி.

★

## ஏற்பட்ட பலன்

ராமு:—உமது பெண்ணுக்காக "மணமகன் தேவை" என்று பத்திரிகைகளில் விளம்பரம் போட்டீரே ஏதாவது பலன் உண்டா?

சோமு:—ஓ! வந்த விண்ணப்பங்களுக்கு பதில் போடுவதற்காக ஒரு குமாஸ்தாவை நியமித்தேன். பிறகு அவனுக்கே பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டேன்.

—ஸ்ரீ. கார்த்திகேயன்.

★

## மன்னிக்கவேணும்

ஜோஸியர்:—தற்சமயம் உன்னோடு பழகி வரும் ஒருவன் இப்போது ஏமாற்றமடையப் போகிறான்.

ஒருவன்:—ஆம். நான் மணிபர்ஸ் கொண்டு வர மறந்துவிட்டேன். மன்னிக்கவேணும்!

—டி. ரங்காச்சாரி.

★

## எப்படி வருவார்?

தாயார்:—ஏன் இன்னும் உன் புருஷன் வீட்டுக்கு வரவில்லை?

அவள் பெண்:—நீ ஊரிலிருந்து வந்திருப்பதாக நான் ஆபீஸுக்குச் சொல்லி அனுப்பி விட்டேன்! —கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி.

★

## வீண் மயக்கம்!

வேலைக்காரன் (அவசரமாக ஓடி வந்து):—அம்மா! மாடி அறையிலே மூர்ச்சை போட்டு விழுந்து கிடக்கிறாரு ஐயா!

எஜமானி:—என்னடாது! எப்படிடா விழுந்தார்? விவரமாகச் சொல்லுடா!

வேலை:—ஒண்ணுமே செய்யலிங்க அவரு! பீரோவைத் திறந்தாரு. உடனே விழுந்துட்டாரு!

எஜ:—சரிதான்! நான் நேத்திக்கு வாங்கிக் கொண்டுவந்த பட்டுப் புடவையைப் பார்த்து விட்டார் போல் இருக்கு! —கே. மோகனன்.

★

## உண்மை!

தாய்:—என் குழந்தை என் ஜாடையாகவே இருக்கிறதாம். இதன் அப்பா அடிக்கடி சொல்கிறார்.



தோழி:—நானும் அப்படித்தான் நினைத்தேன்...... சொன்னால் கோபித்துக் கொள்வாயோ என்று பேசாமல் இருந்தேன்!

—கே. ஸ்ரீநிவாசன்.




# 'ZEPHROL'

## "ஸெப்ரால்"

இருமலுக்கான

ஸிரப்

எபிட்ரைன் அடங்கியது.

பாட்டில் விலை ரூ. 1/8

கீர்த்தி வாய்ந்த "M & B - 693"

தயாரித்தவர்களால் அளிக்கப்படுவது.

## மே & பேக்கர் லிமிடெட்

## MAY & BAKER LTD.



# படித்துப் பார் !

## ஒரு நாள் கூத்து

[ஆசிரியர்: நாடோடி; கிடைக்குமிடம்: நாடோடி, தியாகராயநகர், சென்னை; விலை: ரூபாய் மூன்று.]

என்றைக்குமில்லாத திருநாளாய் கிருஷ்ணசாமி அய்யர் ஒரு சங்கல்பம் செய்து கொள்ளுகிறார்: இன்றைக்குப் பொய்யே பேசுவதில்லை. உண்மையையே யாரிடமும் பேசுவது என்று. கடன்காரன் ஷோக்மூல் வருகிறான். அவனிடம் தம் சங்கல்பத்தை நிறைவேற்றப் போய் அடியும் குத்தும் வாங்கிக் கொள்ளுகிறார். பிறகு ஆபீஸ் மானேஜரிடம் போக அவர் வேலையைவிட்டுத் துரத்துகிறார். மனைவியிடம், மாமனாரிடம் — எல்லாரிடம் ஒரே சண்டை, ரகளை. ஒரு நாள் உண்மையைப் பேச நேர்ந்த இந்தக் கூத்துத்தான் ஒருநாள் கூத்து என்னும் நாடோடி புஸ்தகத்தின் முதல் கட்டுரை.

மேற்படி ஒருநாள் கூத்தின் சம்பவங்கள் ஒரே சோக சிகரமாக உங்களுக்குத் தோன்றுகிறதல்லவா? இந்தப் புத்தகத்தின் அடுத்த கட்டுரை 'சோக சிகரந்'தான்.

இந்தச் சோக சிகரத்தில் பல கொலைகளையும் பல கருச்சிதைவுகளையும் நடத்தி, ஹாஸ்ய சிகரமாகச் செய்கிறார் நாடோடி. எத்தனை பயங்கரமான விஷயங்களிலிருந்தும் நகைச்சுவையைக் கண்டுபிடித்து இழுத்துவரக் கூடிய நாடோடியின் தனிப்பட்ட ஆற்றல் இந்தக் கட்டுரையில் நன்கு வெளியாகிறது.

• • •

துன்பம் நிறைந்த இந்த உலகத்தில் சிரிக்கத் தெரிந்தவன் பாக்கியசாலி; பிறருக்குச் சிரிப்பு மூட்ட அறிந்தவன் இன்னும் பாக்கியசாலி; தன்னைப் பார்த்து, தன்னுடைய குற்றங் குறைகளைப் பார்த்துச் சிரிக்கத் தெரிந்தவன் மிக மிக பாக்கியசாலி; தன்னைப் பார்த்து மற்றவர்கள் சிரிக்கும்படி செய்யும் ஆற்றல் வாய்ந்தவனே எல்லாவற்றிலும் அதிக பாக்கியசாலி.

மேற்கூறிய நாலு வகை பாக்கியங்களையும் பெற்றவர் நாடோடி. தம்மையும் தம்முடைய வீட்டுக்காரரையும் அடுத்த வீட்டுக்காரர்களையும் ஆபீஸ் சிநேகிதர்களையும் பற்றிய முடிவில்லாமல் எழுதி, தானும் சிரித்து மற்றவர்களையும் சிரிக்கப் பண்ணும் அபூர்வ சக்தி இந்தப் புத்தகத்தில் பூரணமாய்ச் சோபிக்கிறது.

## உலகம் சுற்றும் தமிழன்

[ஆசிரியர்: ஏ. கே. செட்டியார்: வெளியீடு: குமரி மலர்: விற்பனை: தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை: விலை: ரூ. 4.]

உலகத்தை ஒரு சுற்றுச் சுற்ற வேண்டும் என்றதற்குத் தந்திமுகக் கடவுள் சிவபெருமானையே ஒரு சுற்றுச் சுற்றி வந்து விட்டு உலகத்தைச் சுற்றியாச்சு என்றாராம். நமக்கு அந்தச் சிரமங்கூட இல்லை. படுத்த படுக்கையிலே யிருந்து கொண்டே கப்பல் ஏறி ரயில் ஏறி விமானம் ஏறி ஜப்பான் முதல் அமெரிக்கா வரை ஒரு சுற்று ரொம்ப ஆனந்தமாகச் சுற்றி வந்து விடலாம்.

ஒரு குறும்புக்கார நீக்ரோப் பெண்ணிடம் ''உங்கள் பாஷையில் 'வந்தனம்' என்று சொல்லுவதற்கு என்ன?'' என்று கேட்டாராம் ஏ. கே. செட்டியார். அவள் 'பியிலே பினிக்ஸ்' என்றாளாம். இன்னொரு நீக்ரோவைப் பார்த்த போது ரொம்ப அன்புடன் 'பியிலே பினிக்ஸ்' என்றாராம். அவர் ''அப்பா இனிமேல் அப்படிச் சொல்லாதே! 'பியிலே பினிக்ஸ்' என்றால் குளத்தில் விழு என்று அர்த்தம்'' என்றாராம்.

இந்த ரஸமான புஸ்தகத்தைப் படிக்கும் போது யாராவது குறுக்கே வந்து தொந்தரவு பண்ணினால் பியிலே பினிக்ஸ் என்று சொல்லித்தான் அவர்களை நாம் வரவேற்க வேண்டியதாயிருக்கும்.

## பதினெட்டாம் பெருக்கு

[ஆசிரியர்: ந. பிச்சமூர்த்தி: பிரசுரம்: ஹிமாலயப் பிரசுரம், திருச்சிராப்பள்ளி; விலை ரூ. மூன்று]

இன்று தமிழ் நாட்டிலே சிறு கதைகளுக்காக ஒருவர் உயிர்வாழ்கிறார் என்றால், அவர் ஆசிரியர் ந. பிச்சமூர்த்தியைத் தவிர வேறு யாராயிருக்க முடியும்?

மறுமலர்ச்சி எழுத்தாளர்கள், காலஞ்சென்ற கு. ப. ரா. வைக் காட்டிலும் அதிகமாக மரியாதை செய்யும் எழுத்தாளர் ஒருவர் உண்டு என்றால் அவர் ஸ்ரீ பிச்சமூர்த்தி அவர்கள்தான். நேற்றுத் தோன்றிய புது எழுத்தாளர்களுடைய கதைகளெல்லாம் புத்தக வடிவில் வந்திருக்கும் போது, ஸ்ரீ பிச்சமூர்த்தியின் கதைகள் ஏன் இன்னும் புத்தக வடிவில் வெளிவரவில்லை என்பது பலருக்கும் அதிசயமாயிருந்தது. ஆனால், அந்தத் தாமதத்திற்குக் காரணம் இப்போதுதான் புரிகிறது. அவருடைய புத்தகம் ஹிமாலயப் பிரசுரமாக வெளிவர வேண்டுமென்று இருக்கும் போது சாதாரணப் பிரசுரமாக எப்படி வெளிவரும்? ஆசிரியருக் கேற்ற பொருத்தமான பிரசுராலயம்! ஸ்ரீ பிச்சமூர்த்தியின் எழுத்துத் திறமைக்கு ஹிமாலயத்தைத் தவிர வேறு எதை உதாரணமாகச் சொல்வது?

ஸ்ரீ பிச்சமூர்த்தி மேல் நாட்டுச் சிறுகதை இலக்கியங்களையெல்லாம் நன்கு பயின்றவர். சிறு கதை நுட்பங்களை எல்லாம் நன்கு உணர்ந்தவர். வெறும் காதல் ஒன்றே சிறு கதை எழுதுவதற்கு வசதியான பொருள் என்று கருதுபவரல்ல. வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களையும் சிறுகதைகளிலே நுட்பமாகப் புகுத்தும் திறமையை இந்தக் கதைத் தொகுதியிலே நாம் காண்கிறோம். பதினைந்து கதைகளடங்கிய இந்தத் தொகுதியிலே எது மிகவும் சிறந்தது என்பதை நிர்ணயிப்பது சிரமமான காரியம். கலைஞன் கைபட்ட இடமெல்லாம் கலையின் சிறப்பு தென்படத்தானே செய்யும்? பொதுவாக, இந்தத் தொகுதி சிறுகதை இலக்கியத்திற்கு ஒரு சிறந்த பொக்கிஷமாகும்.

ஸ்ரீ பிச்சமூர்த்தி நல்ல எழுத்தாளர், கலைஞர். நீண்ட அழகான தாடியுள்பட, கலைஞருக்கு வேண்டிய எல்லா அம்சங்களும் அவரிடம் அமைந்திருக்கின்றன. அவரைப் போன்றவர்கள் தாம் தமிழ் மொழிக்கு நல்ல சேவை செய்ய முடியும். அவருடைய இலக்கிய சேவைக்குத் தமிழ்நாடு நல்ல உற்சாகம் அளிக்குமென்று எதிர்பார்க்கிறோம்.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 129. அவளுக்கும் விமோசனம்.

ராமன் மேல் சூர்ப்பனகைக்கு உண்டான காதலின் வேகம் இப்படி அப்படியல்ல; அவளை எப்படியெல்லாமோ துன்புறுத்துகிறது. அது, சித்திரவதையே செய்கிறது. அந்த நிலையில் அந்தி நேரம் வந்தது. காதலின் கொடுமைக்கு அளவேது? பிறகு இரவும் வந்தது, நிலவும் வந்தது. சகிக்க முடியாத தாபத்துக்கு உள்ளாகிறாள் அவள்.

இவ்வளவு கஷ்டத்துக்குள்ளும் ராமனை அடைந்து விடலாம். அவனோடு வாழலாம் என்ற ஆசை அவளது மனசை விட்டுப் போன பாடாக இல்லை. உருவெளித் தோற்றங்களும் நிகழ்ச்சிகளும் மனசுக்குள் வந்து உக்கு மறைகின்றன. இந்த ஏமாற்றத்தை ஒழிப்பதற்கு வழி தெரியவில்லை. புலம்புகிறாள் — ராமனை விளித்துத்தான்.

'வஞ்ச னைக்கொடு
மாயைவ ளர்க்கும்என்
நெஞ்சு புக்(கு)என(து)
ஆவத்தை நீக்(கு)' எனும்;
அஞ்ச னக்கிரி—
யேஅரு ளாய்' எனும்;—
நஞ்சம் நக்கினன்
போலந டுங்குவாள்.

[வஞ்சனைக் கொடு மாயை வளர்க்கும்: என்னை வஞ்சித்து வஞ்சித்துக் கொடிய மாயைகளை வளர்த்துக் கொண்டிருக்கும்; என் நெஞ்சு புக்கு: இந்த நெஞ்சுக்குள் வந்து என்னை அணைந்து: எனது ஆவத்தை நீக்கு எனும்: என்னுடைய கஷ்டங்களை யெல்லாம் நிவர்த்திப்பாயாக என்று,—புலம்பும்: அடுத்தாற் போல்—அஞ்சனக்கிரியே! அருளாய் எனும்: நீல மலையே, (ராமனை) என்னை ஏற்றுக் கொள்ள மாட்டாயா என்று புலம்பும்: இப்படிப் புலம்புகிறது யார்.— நஞ்சம் நக்கினள் போல நடுங்குவாள்: விஷத்தை ஏதோ அகஸ்மாத்தாய் உட்கொண்டவள் போல நடுக்க முற்றவளான சூர்ப்பனகை.

குறிப்பு:—ராமன் நெஞ்சோடு வந்து அணைந்துவிட்டால் அந்த நெஞ்சுக்குள் (மனசில்) உண்டாகும் மயக்கங்கள் எல்லாம் தீர்ந்து விடும் என்பதான மயக்க பாவம் வெகு அழகாகத் தொனிக்கிறது.]

சீதையின் அழகை வியக்கும்படியும் செய்கிறது காதல் வெறி:

நாம் கண்ட பெண்ணின் கண் அடடா, நீலோற்பலமா அல்லது கயல்தானோ? அவளுடைய அழகோ, லக்ஷ்மி தேவியை விட மேலாய் இருக்கிறது. அப்படிப்பட்டவள் மனைவியாய் இருக்கும்போது, என்னையும் ஏறிட்டுப் பார்ப்பானோ அவன்.

'காவி யோகய
லோஎனும் கண் இணைத்
தேவி யோ,திரு
மங்கையின் செவ்வியாள்!
பாவி யேனையும்
பார்க்கும் கொலோ' எனும்,—
ஆவி ஓயினும்
ஆசையின் ஓய்விலாள்.

[காவியோ கயலோ எனும் கண் இணை தேவியோ: நீலோற்பலம்தானோ, அல்லது கயல் மீன்தானோ என்று எண்ணும்படியான கண்களைக் கொண்ட அந்த மனையாளோ; திருமங்கையின் செல்வியாள்: லக்ஷ்மி தேவியை விட அழகிற் சிறந்தவள்,—இப்படி மனையாள் இருக்க; பாவியேனையும் பார்க்குங் கொலோ எனும்: விதிகெட்டவளான என்னையும் கண்ணெடுத்துப் பார்க்கவா செய்வான் என்றும் புலம்புகிறாள்; யார்?

ஆவி ஓயினும்
ஆசையின் ஓய்விலாள்

உயிர் போகிறது போல் இருந்தாலும் ஆசை அவன் மனசை விட்டுப்போகிறதாக இல்லை.]

சூர்ப்பனகையினுடைய காதல் அவளை இப்படிப் பாடாய்ப் படுத்திக் கொண்டிருக்கிறது; அந்த வேளையில்:

ஆன்ற காதல்
அஃதுற எய்துழி,
மூன்று லோகமும்
மூடும் அரக்கராம்
என்ற கார்இருள்
நீக்க, இ ராகவன்
தோன்றி னான்என
வெய்யவன் தோன்றினான்.

[ஆன்ற காதல்: சூர்ப்பனகையின் அடங்காத பெருங் காதல்; அஃதுற எய்துழி: மேலே சொன்ன விதமாக அவளைத் துன்புறுத்திக் கொண்டிருக்க; மூன்று லோகமும் மூடும்: மூன்று உலகங்களையுமே தங்கள் கொடிய செய்கைகளால் துன்புறுத்தி வரும்! அரக்கராம் என்ற கார்இருள் நீக்க: அரக்கர்களாகிய நெருங்கிய இருளை நீக்குவதற்கு; இராகவன் தோன்றினான் என: ராமன் தோன்றியது போல: வெய்யவன் தோன்றினான்: சூரியன் கிழக்கில் உதயமானான்.]

இரவில் சூர்ப்பனகை பட்ட கஷ்டத்தையெல்லாம் பார்த்தோம். தாங்க முடியாத கஷ்டந்தான். அந்தக் கஷ்டங்களுக்கு முடிவே இல்லையோ என்று அவளுக்குத் தோன்றியது. அப்படியே நமக்கும் தோன்றியது.— இரவு முடிந்தது ஒருவாறாக. கிழக்கில் சூரியனும் உதயமாகிறான். அந்தக் கஷ்டங்களும் மயக்கங்களும் ஒருவாறு நிவர்த்தியாகின்றன. விமோசனமே அவளுக்கு உண்டானது போன்ற பாவம் செய்யுளில் தொனிக்கிறது.

# உல்லாசப் பிரயாணம்

ஸோமாஸ்

## காட்சி 1

இடம்: ராமநாதையர் வீட்டு மாடி அறை.

ராமநாதையர் (தமக்குள்):— என்னது! மணி எழாகிவிட்டது. இன்னும் காப்பி கொண்டு வராமல் இருக்கிறாளே! (வெளிப்படையாய்) பங்கஜம், பங்கஜம்! ஞாயிற்றுக்கிழமை யென்றால் காப்பி சாப்பிடுவதற்குக் கூட லீவா! (இப்பொழுது குரலில் கோபம்)

பங்கஜம்:—நான் அப்படியா சொன்னேன்? என்னை என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? குழந்தை பிரேமாவுக்கு உடம்பு சரியாயில்லை. நடராஜன் பக்ஷணம் வேண்டும் என்று பிடிவாதம் பண்ணுகிறான். அம்புஜவுக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கிறேன்! நான் ஒண்டிக்காரி எத்தனை காரியம் என்று கவனிப்பேன்? நீங்கள் தான் கீழே இறங்கி வந்து காப்பியைச் சாப்பிட்டு விட்டுப் போகக் கூடாதா?

[எரிச்சலுடன் கூறுகிறாள்.]

ராமநாதையர் (பல்லைக் கடித்துக் கொண்டு கோபத்துடன்):—என்ன திமிர் இவளுக்கு? முன்பெல்லாம் எள் என்பதற்கு முன் எண்ணெயா யிருந்தவளுக்கு இப்பொழுது எங்கிருந்து இவ்வளவு துணிச்சல் வந்தது? (பெருமூச்சு) ஹூம்!

நாராயணையர் (பிரவேசித்து):— என்னங்காணும் ராமநாதையர்வாள்! ஆள் வருவது கூடத் தெரியாமல் அவ்வளவு என்ன ஆழ்ந்த யோசனை?

ராமநாதையர்:— ஓ! நாராயணையர்வாளா? வரணும்! வரணும்! ஏது இவ்வளவு தூரம்! உட்காருங்கள்!

நாராயணையர்:—சும்மா இப்படி உங்களைப் பார்க்கலாம் என்றுதான் வந்தேன். ஞாயிற்றுக்கிழமை யல்லவா? அது இருக்கட்டும். எந்தக் கோட்டையைப் பிடிக்கச் சதியாலோசனை செய்கிறீர்?

ராமநாதையர் (ரொம்பவும் அலுப்புடன்):—சதியாலோசனையா? அதெல்லாம் ஒன்றுமில்லை! சதிபதிகளுக்குள் பரஸ்பரம் அன்பு என்னும் ஒரு தொடர்பு இல்லையென்றால் அப்புறம் வாழ்க்கையில் என்ன இருக்கிறது?

நாராயணையர்:—அடேடே! எத்தனை நாளாக இப்படிக் கட்டுரை பாஷையில் பேச ஆரம்பித்திருக்கிறீர்? அது என்ன அப்படி திடீரென்று விரக்தி ஏற்பட்டு விட்டது?

ராமநாதையர்:—காலையில் எழுந்தவுடன் புருஷனுக்குக் காப்பி போட்டுத் தரவேண்டும் என்று ஒருத்திக்குத் தெரியவில்லை என்றால் அவன் மனசு எப்படியிருக்கும் என்று நீங்களே சொல்லுங்கள்!

நாராயணையர்:— ஓகோ! அப்படிச் சொல்லுங்கள்! ஆத்துக்காரி காப்பியுங் கையுமாக உமக்கு எதிரில் நிற்கவில்லை என்கிற கோபமா? சரிதான்! சரிதான்! ரொம்ப லக்ஷணமாயிருக்கிறது! உமக்கு மூன்று குழந்தைகள் இருக்கின்றன. இன்னமுங்கூட அந்தமாதிரி மரியாதையை எதிர்பார்க்கிறீரே! நீர் என்ன புது மாப்பிள்ளையா? நான்கூட வீட்டிலிருந்து புறப்படும்போது காப்பி ஆகவில்லை; அவளுக்கும் ஹோட்டலில் ஒரு 'கப்' காப்பி வாங்கிக் கொடுத்து விட்டு நானும் ஒரு 'கப்' காப்பி வாங்கிச் சாப்பிட்டு விட்டு வந்தேன்.

[பங்கஜம் இருவருக்கும் காப்பி கொண்டு வந்து வைக்கிறாள்.]

ராமநாதையர் (கோபத்துடன்):—இதோ பார், பங்கஜம்! உன் காப்பியும் வேண்டாம்,

---

## குற்றமில்லை!



"உன் மேல் குற்றம் ஒன்றும் இல்லை என்று தீர்ப்பு ஆகி இருக்கிறது. இனி மேல் நீ போகலாம்!"

"அப்படின்னா நான் திருடிய பணத்தைத் திருப்பிக் கொடுத்துட்டுப் போகணுங்களா?"

ஒன்றும் வேண்டாம்! நானும் நாராயணையரும் ஹோட்டலுக்குப் போகிறோம்.

நாராயணையர்:—சே, சே! அவ்வளவு கோபம் கூடாது ஐயா உமக்கு! நானும் சாப்பிடுகிறேன், நீரும் சாப்பிடும்!

[இருவரும் காப்பி சாப்பிடுகின்றனர்.]

## காட்சி 2

இடம்: ராமநாதையர் வீடு.

பங்கஜம்:—என்னோடு ஒரு வாரமாகச் சரியாகவே பேசாமலிருக்கிறீர்களே! நான் என்ன வேண்டுமென்றே உங்களைக் கவனிக்காமல் இருக்கிறேனா? எல்லாம் இந்தக் குழந்தைகளின் தொந்தரவினால்தான் உங்களைச் சரியாய்க் கவனிக்க முடியவில்லை. கோபித்துக் கொள்ளக் கூடாது! உங்களிடம் ஒரு முக்கியமான சமாசாரம் பேச வேண்டுமென்று அல்லவா வந்தேன்?

ராமநாதையர்:—என் கோபமெல்லாம் அப்பொழுதே பறந்து போய் விட்டது! என்ன முக்கியமான சமாசாரம், சொல்லு?

பங்கஜம்:—கமலாவும் அவள் அகத்துக்காரரும் மதுரைக்குப் போகிறார்களாம். நாமும் அவர்களோடு போய் வந்தால் என்ன? மீனாக்ஷி சுந்தரேசுவரரையும் தரிசனம் பண்ண வேண்டும் என்று ரொம் நாளாக எனக்கு ஆசை!

ராமநாதையர்:—ஒரு பத்து நாளைக் லீவு எடுத்துக் கொண்டு எந்த ஊருக்காவ போய் வரலாம் என்றுதான் நினைத்தேன் நீயே சொல்லி விட்டாய். கொஞ்ச நாளைக் ஆபீஸை மறந்து விட்டு நிம்மதியாக உல்ல ஸப் பிரயாணம் போய் வரலாம்.

பங்கஜம்:—நான் முதலிலேயே சொல் விடுகிறேன். நம்ம குழந்தைகளையும் அ கெல்லாம் அழைத்துச் செல்லுவதென்ற அது முடியாத காரியம். குழந்தைகளை விட்டு விட்டு நிம்மதியாக ஸ்வாமி தரிசன செய்து விட்டு வரலாம்.

ராமநாதையர்:—ரொம்ப நன்றாயிரு கிறதே நீ சொல்லுவது! குழந்தைகளை விட்டு விட்டு நாம் மாத்திரம் கையை வீசி கொண்டு ஒய்யாரமாகப் போய் விட்டா குழந்தைகளை யார் பார்த்துக் கொள்வது பைத்தியக்காரியா யிருக்கிறாயே?

பங்கஜம்:—நான் ஒன்றும் பைத்தியக்காரியில்லை! குழந்தைகளை அப்படி விட் விட்டுப் போக எனக்கு மட்டும் மன வருமா? என் தம்பி கிட்டுவுக்குக் குழந்தை என்றால் உயிர்! ஈசுவரன் அவனுக்கு ஒ

ழந்தையைக் கொடுக்கவில்லை! நம்
ழந்தைகளைக் கொஞ்ச காலைக்குத் தன்
ரிடம் விட்டு வைக்கும்படி கேட்டுக்
காண்டே யிருக்கிறான்.

ராமநாதையர்:—பேஷ், பேஷ்! நல்ல
யாசனை! பங்கஜம், என்ன இருந்தாலும்
புத்திசாலிதான்! அப்படியே செய்யலாம்!

பங்கஜம்:—சரி; ரொம்ப சந்தோஷம்.
ப்பொழுதாவது நான் புத்திசாலி யென்
று தெரிந்ததே! நீங்கள் முதலில் ஆபீ
ஸுக்குப் போய் லீவுக்கு ஏற்பாடு பண்
ணுங்கள். நான் சுசீலாவின் வீட்டுக்குப்
பாய் அவர்களுடன் நாமும் வருவதாகச்
சால்லிவிடுகிறேன்.

## காட்சி 3

இடம்: மதுரை.

[ஒரு பங்களாவில் ராமநாதையரும் பங்கஜமும் இறங்கியிருக்கின்றனர்.]

ராமநாதையர்:— என்ன பங்கஜம்,
க்ஷியம்மன் கோவில் எப்படி யிருக்கிறது
ார்த்தாயா? அற்புதமா யிருக்கிறது,
ல்லையா? உடம்புக் கென்ன? என் உற்
ாக மில்லாமல் இருக்கிறாய்? ஹோட்டலில்
ாப்பாட்டுக்குச் சொல்லி யிருக்கிறேன்.
ங்கஜம், இதோ சாப்பாடும் வந்து விட்
து! வா, சாப்பிடலாம்!

பங்கஜம்:—எனக்குப் பசியே யில்லை!

ராமநாதையர்:—ஏன்? மூன்று மைல்
ளுக்கு மேல் சுற்றியிருக்கிறோமே!
ளைப்பா யில்லையா?

பங்கஜம்:—என்ன சாப்பாடு வேண்டிக்
டக்கு? ஊரிலே அம்புஜா என்ன பண்
ிக்கொண்டிருக்கிறாளோ? நடராஜன்
டிவாதம் பிடிப்பான். சாப்பிடமாட்டேன்
ன்று அடம் பண்ணுவான். குழந்தைகளை
யல்லாம் விட்டு விட்டு என்ன கோவில்
ளம் வேண்டிக் கிடக்கு? புதிதாகக்
ல்யாணமானவர்கள் மாதிரி நீங்களும்
ானும் ஒருவரை யொருவர் பார்த்துக்
காண்டிருப்பது எனக்குக் கொஞ்சங்
டப் பிடிக்கவில்லை. இராத்திரி ரயிலி
லயே ஊருக்குப் போய்விடலாம்.

ராமநாதையர்:—எனக்குக்கூட மனசு
ியாயில்லை. குழந்தைகள் எல்லாம் நான்
ப்பிடும் சமயம் வந்து தொந்தரவு பண்
மே, அதே ஞாபகமா யிருக்கிறது. சரி,
ன்று இராத்திரி ரயிலிலேயே ஊருக்குப்
றப்பட்டு விடுவோம்.

[தம்பதிகள் மூட்டை கட்டுகின்றனர்.]

# கமலா இருக்கிறாள்!



**நாடோடி**



டில்லியிலிருந்து என் தமக்கை கமலா வந்தாலும் வந்தாள், பாவம், மன்னி அரை உடம்பாக ஆகிவிட்டாள். தன் மாப்பிள்ளைக்கும், பெண்ணுக்கும் உபசாரம் பண்ணி, பண்ணி மன்னிக்கு உடம்பு ஓடாக ஆகிவிட்டது.

கமலாவும் அத்திம்பேரும் ஊரிலிருந்து வந்து நான்கு நாட்கள்தான் ஆகின்றன. ஆனால் அதற்குள் கமலாவும், மன்னியும் நாலாயிரம் தடவைக்குக் குறையாமல் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள்.

காலையில் காப்பி கொடுத்தால் அதற்கு ஒரு சண்டை. டிபனுக்கு அழைத்தால் அதற்கொரு சண்டை. ஸ்நானம் பண்ண அழைத்தால் அதற்கொரு சண்டை.

இந்தமாதிரி ஒவ்வொரு விஷயத்துக்கும் சண்டைதான்.

அத்திம்பேருக்கு எந்தச் சாமானும் எவ்வளவு உசத்தியாய்ப் பண்ணிப் போட்டாலும் கமலாவுக்குத் திருப்தி ஏற்படாது.

உதாரணமாக எவ்வளவு நல்ல காப்பிதான் போட்டுக் கொடுக்கட்டும், கமலாவுக்குத் திருப்தி ஏற்படாது. நாங்கள் குடிக்கும் காப்பியைவிட அவருக்குக் கொடுக்கும் காப்பி உசத்தியாக இருந்தால்தான் திருப்தி.

ஆனால் இதில் சங்கடம் என்னவென்றால், நாங்கள் போட்டுக் குடிக்கும் காப்பியே மிகவும் உசத்தியான காப்பிதான். எங்கள் வீட்டில் உள்ள எல்லாருக்குமே காப்பி விஷயத்தில் சற்று நாக்கு நீளமாகையால் எவ்வளவு உசத்தியாகக் காப்பி போட முடியுமோ அவ்வளவு உசத்தியாகத்தான் மன்னி போடுவாள். காப்பி சமயம் பார்த்து அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர் ஏதாவதொரு விவாதத்தை வைத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்து விடுவார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

ஆகவே காப்பி இத்தனை உசத்தியாகப் போடும்போது அதைவிட உசத்தியாகப் போட என்றால் எப்படி முடியும்? ஆகவே மாப்பிள்ளைக்குக் கொடுக்கப்படும் காப்பியை உசத்தியாகப் பண்ணுவதற்கு மன்னிக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றும். எங்களுக்குக் கொடுக்கப்படும் காப்பியில் கமலாவுக்கு எதிரில் ஒரு டம்ளர் வென்னீர்த் தண்ணீரைக் கொட்டுவதுதான் அது!

மாப்பிள்ளை கோபித்துக் கொண்டு போகாமல் இருக்கவேண்டுமே என்பதற்காக நாங்கள் தண்ணீர்க் காப்பியைக் குடித்துத் தொலைப்போம்.

காப்பியைத்தான் இந்த வழியில் உசத்தி பண்ணியாகி விட்டது. ஸ்நானத்திற்காகப் போடும் வென்னீரை எப்படி உசத்தி பண்ணுவது? வென்னீர் அடுப்பை மன்னி எப்படி எரிய விட்டால் என்ன, வென்னீர் சுடுகிறதா என்று கவனிக்க வேண்டியதுதானே! ஆனால் கமலா அதுதான் மாட்டாள்.

இது விஷயத்தில் மன்னி எப்பொழுதும் சற்று செட்டுத்தான். வீட்டில் இருக்கும் குப்பைக் கூளங்களைக் கொண்டே வென்னீர் தயார் பண்ணி விடுவாள். ஆனால் இது கமலாவுக்குப் பொறுக்காது. இப்படிப் பண்ணுவது மாப்பிள்ளையை அலட்சியம் பண்ணுவது போலாகுமாம்! சவுக்கு விறகு வைத்து வென்னீர் போட்டால்தான் மாப்பிள்ளையைக் கவனித்தது ஆகுமாம். ஆனால் சவுக்கு விறகை வீணாக்குவது என்றால் மன்னியின் கண்ணில் ஜலம் வந்து விடும்.

இத்தனை சண்டைக்கும் காரணமான மாப்பிள்ளை வாயைத் திறந்து ஏதாவது சொல்ல வேண்டுமே, அல்லது கேட்க வேண்டுமே! மாட்டார். கலியாணமாகி இருபது வருஷங்கள் ஆகப்போகின்றன. இருந்தும் மாமனார் முதலியவர்களோடு வாயைத் திறந்து ஒன்றும் பேசாதே என்று அவர் தாயார் கல்யாணத்தின் போது சொல்லிக் கொடுத்த வார்த்தையை இன்னும் மாதுர் வாக்கிய பரிபாலனம் செய்து வருகிறார்!

தனக்கு என்னவேண்டியிருந்தாலும் கல்லுப் பிள்ளையார்போல் ரேழி அறையில் உட்கார்ந்து கொண்டு, தன் மனைவியை ஏவி விட்டு விடுவாரே யொழிய, தானாக ஒன்றும் கேட்க மாட்டார்.

இன்னும், கல்யாணத்தின்போது அப்பா இவரை ஒவ்வொரு காரியத்துக்கும், தேங்காய் பழம் வைத்து அழைத்தது போல் இப்போதும் அழைத்துக் கொண்டு வரவேண்டும்.



"பேப்பர்லே என்ன போட்டிருக்குங்க?"
"நம்ப நாட்டிலே நாம் எல்லாரும் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகாததால்தான் நமக்குள் ஒற்றுமை ஏற்படவில்லை என்று போட்டிருக்கிறது"

"நேற்று நான்தானேடா உட்கார்ந்திருந்தேன்?" என்று திரும்பவும் ஊளையிட ஆரம்பிப்பாள் அடங்காப்பிடாரி.

"அதனால்தான் இன்று நான் உட்காருவேன் என்கிறேன். என்ன, அப்பாவுக்கு நீ ஒருத்திதான் குழந்தை, நாங்கள் எல்லாம் இல்லையென்று நினைத்தாயா?" என்று மேலே பேசுவான் அரட்டைக்கல்வி.

இத்தனை இரைச்சலையும், சப்தத்தையும் பார்த்துச் சிரித்துக் கொண்டே அப்பா உட்கார்ந்திருப்பார். சண்டையை நீக்க ஒரு முயற்சியும் செய்யமாட்டார். சத்தமும், இரைச்சலும் அதிகரிக்க, அதிகரிக்க அவருக்கு ஏற்படும் ஆனந்தம் சொல்லி முடியாது. சண்டையும் இரைச்சலும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு நாங்கள் அவர்மீது அன்பாக

உதாரணமாக எங்கள் வீட்டில் சாப்பாட்டு சமயம் என்றாலே தெரு முழுவதும் காது செவிடுபடும்.

எங்கள் எல்லாருக்குமே மன்னி ஒரே விதமான தட்டுகள் வாங்கி வைத்திருப்பதால் "டேய்! இது என் தட்டு," "அடியே! இது என் தட்டு" என்று எங்களுக்குள் பிரமாதமான இரைச்சல் நிகழும்.

"மன்னி! என் தட்டை பாலு எடுத்துக் கொண்டு விட்டான்" என்று அஜ்ஜிப் பயல் ஊளையிடுவான்.

"மன்னி! என் தட்டை அடங்காப்பிடாரி எடுத்துக் கொண்டு விட்டாள்" என்று பாலு கர்ஜனை செய்வான்.

இந்த மாதிரி தட்டுகளுக்கு நாங்கள் போடும் சண்டை போதாது என்று யார் எந்த இடத்தில் உட்காருவது என்பதற்காகவும் ஒரு சண்டை போடுவோம்.

அப்பா பக்கத்தில் உட்காருவது என்றாலே எங்கள் எல்லாருக்கும் ஒரு தனி ஆனந்தம்!

"நான்தானேடா, நேற்று அப்பாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தேன்? நீ ஏண்டா உட்கார்ந்தாய்?" என்று அடங்காப்பிடாரி பாலுவைச் சண்டைக்கு இழுப்பாள்.

"நேற்று நீ உட்கார்ந்தாயோ, இல்லையோ? அதனால் நான் இன்றைக்கு உட்காருகிறேன்" என்று நியாயம் பேசுவான் அரட்டைக் கல்வி பாலு.

இருப்பதாகக் கொள்வார்! ஆகக்கூடி இத்தனை இரைச்சலைக் கொண்டே "சாப்பாட்டுக் கடை" ஆரம்பிக்கப் போகிறது என்று ஊகிக்கத் துப்பறியும் நிபுணர்கள் தேவையில்லை. சாதாரண அறிவுடைய யாருமே ஒரு க்ஷணத்தில் தெரிந்து கொண்டுவிடலாம்!

ஆனால் எங்கள் அத்திம்பேர் இதைத் தெரிந்து கொள்ள மாட்டார்! அத்திம்பேர் இலை காலியாக இருப்பதைப் பார்த்து விட்டு, "போய் அத்திம்பேரை அழைத்துக் கொண்டு வாடா" என்று பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் அஜ்ஜிப் பயலை அப்பா ஏவுவார்.

"அரட்டைக் கல்வியைப் போகச் சொல்லு அப்பா, நான் போனால் என் இடத்தை அவன் பிடுங்கிக் கொண்டு விடுவான்" என்பான் அஜ்ஜிப் பயல்.

"இல்லை, உன் இடத்தை நான் பார்த்துக் கொள்கிறேன். போய் அத்திம்பேரைச் சாப்பிட அழைத்துக் கொண்டு வா" என்பார் அப்பா.

அஜ்ஜிப் பயல் அரட்டைக்கல்வி என்ன பண்ணப் போகிறான் என்று தெரிந்து கொள்வதற்காக அவன் முகத்தையே சற்று நேரம் பார்த்து விட்டு, வெகு தயக்கத்துடன் எழுந்து அத்திம்பேரை அழைத்து விட்டுத் திரும்பி வருவான்.

ஆனால் அத்திம்பேர் வரமாட்டார்.

"என்னடா! அத்திம்பேரைக் கூப்பிட்டாயா?"

"கூப்பிட்டேன் அப்பா!"

"என்ன சொன்னார்?"

"ஒன்றும் சொல்லவில்லை, அப்பா!"

ஆம், அத்திம்பேர் ஒன்றும் சொல்ல மாட்டார். வாயை மூடிக்கொண்டே தான் உட்கார்ந்திருப்பார்.

"டேய், பாலு! நீதான் போய் அத்திம்பேரை அழைத்துக் கொண்டு வாடா!"

பாலு போவான். ஆனால் அத்திம்பேர் வரமாட்டார். பிறகு நான் போவேன். வரமாட்டார்.

இந்தச் சமயத்தில் சமையலறையில் இருக்கும் கமலா சற்று அதிகாரமாகவே கத்துவாள்.

"இதற்குத்தான் நான் இந்த வீட்டுக்கு வரவே மாட்டேன் என்று அடித்துக் கொண்டேன். இந்தமாதிரி அவமானப் படுத்தினால் எந்த மாப்பிள்ளைதான் சாப்பிட வருவார்?" என்று கேட்பாள்.

"மாப்பிள்ளையை என்னடி அம்மா அவமானப் படுத்தி விட்டோம்?" என்று கேட்பாள் மன்னி.

"ஆமாம், இந்தமாதிரி நண்டுகளையும், நசுக்குகளையும் விட்டுக் கூப்பிடச் சொன்னால் அவர் வருவாரா?" என்று கேட்பாள் கமலா.

இதைக் கேட்டதும் நாங்கள் எல்லாரும் பொலபொல வென்று ஆரம்பித்து விடுவோம்.

"யாரடி அம்மா நண்டு?" என்று கேட்பான் அஞ்ஜிப் பயல்.

"யாரடி அம்மா நசுக்கு?" என்று கேட்பாள் அடங்காப் பிடாரி.

நண்டு யார், நசுக்கு யார் என்னும் விஷயம் இங்கு விவாதம் ஆகிக் கொண்டிருப்பதற்குள் அப்பாவே எழுந்து போய் மாப்பிள்ளையை அழைத்துக்கொண்டு வருவார்.

மாமனார்தான் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்து விட்டாரே, இனி கலகல வென்று பேசிக் கொண்டு வேண்டியதைக் கேட்டு வாங்கிச் சாப்பிடலாம் என்று இந்த அத்திம்பேர் இருக்கலாமோ, இல்லையோ? மாட்டார். வாயை மூடிக் கொண்டே, அதாவது ஒரு வார்த்தையும் பேசாமல் சாப்பிடுவார். அவருக்கு எது வேண்டும், எது வேண்டாம் என்றுகூடச் சொல்ல மாட்டார்.

ஒவ்வொரு பதார்த்தத்தையும், வேண்டுமா, வேண்டாமா என்று கேட்டுத்தான் போட வேண்டும். அவர் வெகு நாசுக்காக ஆட்டும் தலையாட்டலிலிருந்து அவர் வேண்டும் என்று சொல்லுகிறாரா, வேண்டாம் என்று சொல்லுகிறாரா என்றுகூடத் தெரியாது.

இதை வைத்துக் கொண்டு பின்னால் கமலா பொலு பொலு என்று சண்டைக்கு வந்து விடுவாள்.

ஏதாவதொரு பதார்த்தத்தை நிறையப் போட்டு விட்டால், "உன் மாப்பிள்ளை என்ன சாப்பாட்டு ராமன் என்று நினைத்துக் கொண்டாயா? இப்படி மூகத்தில் அடித்தாற்போல் கலத்தில் கொட்டி அவரை அவமானப் படுத்துகிறாயே?" என்று கேட்பாள்.

குறைத்துப் போட்டு விட்டாலும், "இந்த வீட்டுக்கு வந்தால் மாப்பிள்ளைக்குச் சரியாகச் சோறுகூடப் போடமாட்டார்கள். பட்டினி கிடக்க வேண்டியது தான்!" என்று கமலா அலுத்துக் கொள்வாள்.

இந்த வார்த்தை மன்னிக்குத் துளிக்கூடப் பொறுக்காது. உடனே ஏதாவது கடுமையாகப் பதில் சொல்வாள்.

உடனே கமலாவுக்குக் கல்யாணமான தி விருந்து மன்னி செய்த "அட்டூழியங்கள்" எல்லாம் ஞாபகத்துக்கு வந்து விடும். தலை தீபாவளிக்கு வந்திருந்தபோது மாப்பிள்ளைக்கு ஏற்பட்ட "அவமானம்," முதல் வருஷம் லீவுக்கு வந்திருந்தபோது ஏற்பட்ட "அவமானம்" இவை எல்லாவற்றையும் அடுக்கிக்கொண்டே போவாள். இவற்றுக்குப் பதில் சொல்லி, பதில் சொல்லி, மன்னிக்கு, பாவம், தொண்டை காய்ந்துவிடும்.

இந்த இரைச்சலைக் கேட்டு எங்களுக்கும் காது புளித்துவிடும். எப்படா கமலாவும், மாப்பிள்ளையும் ஊருக்குப் புறப்பட்டுப் போகப் போகிறார்கள் என்று ஆகி விடும்.

# நெருப்பின் கோபம்

எம். எஸ். வி.



மார்கழி மாதம். மணி வீட்டு வெந்நீர் அடுப்பு 'திகு திகு' வென்று எரிந்து கொண்டிருந்தது. கூரையில் அடுப்புக்கு நேர் உச்சியில் ஒரு புகைக் கூண்டு இருந்தது. அது பழைய கூண்டு ஆனதால் அதிலிருந்து அகஸ்மாத்தாக ஒரு செங்கல் பெயர்ந்து கீழே இருந்த அடுப்பின்மீது விழுந்தது. அந்தச் சமயம் தீயானது ஆடாமல் அசையாமல் ஒரே நிதானமாய் நின்று தூங்குவதைப் போல் எரிந்து கொண்டிருந்தது. நிம்மதியாகத் தூங்கியவாறு எரிந்து கொண்டிருந்த அந்த நெருப்பின்மீது செங்கல் விழுந்ததும் நெருப்புக்குப் பிரமாதமாய்க் கோபம் வந்து விட்டது.

அந்தச் சமயம் மார்கழி மாதத்துக் குளிர் தாங்காத காகம் ஒன்று மேலேயிருந்த புகைக் கூண்டின்மீது வந்து உட்கார்ந்தது. அது புகைக் கூண்டின் மீது வந்து உட்காருவதற்கும் கூண்டிலிருந்து செங்கல் கீழே விழுவதற்கும் "காக்கை உட்காரப் பனம்பழம் கீழே விழுந்த" கதை மாதிரி ஆயிற்று.

கோபம் கொண்ட நெருப்பு, காக்கை தான் தன் மீது செங்கலைத் தள்ளித் தன் தூக்கத்தைக் கலைத்து விட்டது என்று ஆத்திரப் பட்டது.



"அந்தக் காகத்தை எரித்து விட்டுத் தான் மறுகாரியம்" என்று வாயா நெருப்பைக் கக்கியது. "இதோ தொலைத்து விட்டேன்" என் கோபாவேசத்துடன் முகத்தில் அ விஜ்வாலை வீசக் கிளம்பிற்று.

செங்கல் பெயர்ந்த இடம் பள் மாகக் குளிருக்குப் பதுங்குவதற் ஏற்றதாயிருந்தது. எனவே காக அந்தப் பள்ளத்தில் தன்னை மறை துக் கொண்டு உட்கார்ந்தது.

"யாரது?" என்று கேட்டது தீ.

"நான்தான் காக்கை. இங்கே கு ருக்குப் பதுங்கிக் கொண்டிருக்கி றேன்" என்றது காகம்.

"உனக்கு என்ன தைரியம்? எ மீது செங்கலைத் தள்ளி விட்டு இங்கே குளிருக்கு வேறே ஒண் கிறாயா? இதோ வந்து விட்டேன் என்று கண்களில் தீப்பொறி பறக் கூறியது.

சில்லென்ற காற்று வேகமாக வீ கொண்டிருந்ததால் காகத்துக் நெருப்பு சொன்ன வார்த்தை சரியா கேட்கவில்லை. எனவே அது சொல்லுவது எனக்கு ஒன்றுமே கா கேட்கவில்லை. ஆனாலும் எனக் குளிருக்குப் படுத்துக் கொள்ள ஒரு நல்ல இடம் கொடுத்தாய். அ காக உனக்கு ரொம்ப வந்தன என்றது காகம்.

பிரமாத கோபத்துடன் நெரு "என்ன சொன்னாய்? என்மீது கல் போட்டதோடல்லாமல் என் தலை மேலே வேறு உட்கார்ந்து கொண் என்னைக் கேலி வேறு செய்கிறா இதோ வந்தேன்" என்றது.

"உன் இஷ்டம்" என்றது காக

உடனே நெருப்பின் கோபம் வில்லாமல் போயிற்று. பக்க லிருந்த மண்ணெண்ணெய் புட்டின்

கூப்பிட்டு "புட்டியே! புட்டியே!! உன்னிடம் உள்ள எண்ணெயை என் மீது கொட்டு. அப்போது தான் நான் உயர, உயர எரிந்து அந்த அகம்பாவம் பிடித்த காகத்தின் கர்வத்தை அடக்கலாம்" என்றது.



புட்டியும் நெருப்பின் மீது எண்ணெயை அபிஷேகம் செய்தது. அவ்வளவுதான்! நெருப்பு சீறி எழுந்து அறைக்குப் பாதி உயரத்துக்கு வந்து விட்டது.

"ஹா, ஹா! உன்னை இதோ கொளுத்தி விடுகிறேன்" என்று இறுமாப்புடன் எழும்பியது நெருப்பு.

காகத்துக்கு ஒன்றும் காதில் விழவில்லை. நெருப்பின் சூடு அதன் குளிருக்கு வெகு இதமாயிருந்தது.

"நண்பனே! என் குளிரைப் போக்க ஏன் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்கிறாய்?" என்றது காகம்.

"அப்படியா சங்கதி? கர்வம் தலைக்கேறி விட்டதா? கொஞ்சம் பொறு" என்று கூறி விட்டு, பக்கத்திலிருந்த விறகுக் கட்டைப் பார்த்து, 'விறகுக் கட்டே, வா, வா! எனக்கு உதவி செய். அந்தக் காகத்தைச் சாம்பலாக்கி விடுகிறேன்" என்றது நெருப்பு.

நெருப்பின் சொற்படி விறகும் அதன்மீது போய் விழுந்தது. உடனே தீ முன்னை விட உயரமாய்க் கிளம்பியது. காகம் அதற்கும் லட்சியம் செய்யாமல் மௌனம் சாதித்தது. பின்னர் நெருப்பானது பக்கத்திலிருந்த கரி மூட்டையை ஒத்தாசைக்கு அழைத்தது. கரி மூட்டையும் ஒத்தாசைக்கு வர, தீ இன்னும் மேலே போயிற்று.

"அப்பாடா! ரொம்ப சுகமாயிருக்கிறது" என்று மிகவும் சாந்தமாகக் காகம் கூறிற்று.

இதைக் கேட்ட நெருப்பின் கோபம் அளவு கடந்து போயிற்று. அருகிலிருந்த விசிறியைக் கூப்பிட்டுத்தன் கோபத்தையும் ரோஷத்தையும் இன்னும் தூண்டி விசிறச் சொல்லிற்று.

விசிறியின் காற்றினால் தீ மேலே மேலே உயர உயரக் கூண்டுக்கு வெகு சமீபம் போய் விட்டது. இந்தச் சமயம் உள்ளே தூங்கிக் கொண்டிருந்த மணி பல் தேய்ப்பதற்காக வெந்நீர் அறைக்கு வந்தான். நெருப்பு கூரையை எட்டும்படியாக எரிந்து கொண்டிருப்பதைக் கண்டதும் கூரையில் தீப் பிடித்துக் கொள்ளுமே என்று பயந்து போய் உடனே அடுப்பின்மீது ஒரு வாளி ஜலத்தைக் கொட்டித் தீயை அணைத்தான். நெருப்பின் ஜ்வாலை தணிந்தது. அத்துடன் அதனுடைய கர்வமும், கோபமும் அடங்கிற்று.

பாவம்! ஒன்றுமே அறியாத குளிருக்கு ஒண்ட வந்த காக்கையும் தப்பிப் பிழைத்தது.

---

## மத்தியஸ்தம் வேண்டாம்!



"உங்கள் சண்டையை உங்களோடேயே வைத்துக் கொள்ளுங்கள். என்னை இதில் இழுத்து விடாதிருங்கோ!"

# சைபால் (Regd) CIBOL

முகப்பரு, சேத்துப்புண், சிரங்கு, வேனல் கட்டி
தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக்
கை கண்ட மருந்து

•

# அயோடிசால் (Regd) IODISAL

ரத்தத்தைச் சுத்தி செய்து
திரேகத்திற்கு ஆரோக்கியத்தைக்
கொடுக்கும்.

**பாட்டில் 1-க்கு விலை ரூ. 2—0—0**

•

# பேபி - கிரைப் BABY - GRIPE

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு, வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப்போக்கு, முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

---

தயாரிப்பவர்கள்:

## தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி, மதுரை

மதராஸ் ஸிடி, நெல்லூர், ஸீடெட், விசாகப்பட்டணம்
ஜில்லாக்களுக்கு ஏஜண்டுகள்:

ராஜன் ட்ரக் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ், பி. டி., மதராஸ்

குண்டூர், கோதாவரி, கிருஷ்ணா ஜில்லாக்களுக்கும்
நிஜாம் சமஸ்தானத்திற்கும் ஏஜண்டுகள்:

சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா

மைசூர் சமஸ்தானத்திற்கு ஏஜண்டுகள்:

சேஷமஹால் பார்மஸி, பெங்களூர் ஸிடி.




சிறு கதைப்போட்டி

2வது பரிசுக்கதை



# சிவகாமி

சு. குருசாமி

ஒரு பிராஞ்சு போஸ்ட்மாஸ்டர் அமுல் நடத்துகின்ற ஒரு சிற்றூரில் நான் இப்பொழுது வசித்து வருகிறேன். யாரோ ஓர் அரக்கன் தன்னை எவரும், பகலிலும் கொல்லக்கூடாது; இரவிலும் கொல்லக் கூடாதென்று வரம் கேட்டானாம். ஆனால் எங்களுக்கு யாரிட்ட சாபமோ தெரியவில்லை; எங்களுக்குத் தபால் பகலிலும் வருவதில்லை; இரவிலும் வருவதில்லை; அந்தி மயங்கும் சந்தி நேரத்தில்தான் வந்து சேர்கிறது!

தபால்களைப் பிரிக்கும் நேரத்தில் எங்கள் தபாலாபீஸில் திருவிழாக் கூட்டமாகவே இருக்கும். மறுநாட் காலையில் போஸ்ட் மாஸ்டர் கடிதங்களை ஆள் வசம் கொடுத்து விடும் வரைக்கும் நாங்கள் காத்திருப்பதில்லை. தபாலாபீஸுக்கே போய் விடுவது வழக்கம். கணக்கெடுத்துப் பார்த்தால், மாதத்திற்கு ஒரு நாள் வீதமாவது எனக்குக் கடிதம் வருமோ என்னவோ? ஆனால் மாதம் முப்பதோ, முப்பத்தோரு நாட்களோ தபாலாபீஸுக்குப் போவதற்கு மட்டும் நான் தவறுவதில்லை. ஏனோ இந்த ஆவல்!

நாங்கள் தபால் கேட்கும்போது, 'இல்லை' என்று சொல்வதில்தான் எங்கள் போஸ்ட் மாஸ்டருக்கு வெகு பெருமை. பிச்சைக் காரர்கள் பிச்சை கேட்கும்போது, 'இல்லை' என்று சொல்வதில்தானே ஜனங்கள் அதிக திருப்தி அடைகிறார்கள்!

தபால் ஏதாவது இருந்தாலும் முதலாவது "ஒன்றுமில்லை" என்று சொல்லித்தான் பிறகு "ஒரு கார்டு மட்டுந்தானிருக்கிறது" என்று கொடுப்பார்.

இம்மாதிரி "தபால் ஏதாவது உண்டா?" என்று அந்தி மயங்கும் சந்தி நேரத்தில் ஒரு நாள் நான் கேட்ட போது தான், போஸ்ட்-மாஸ்டர் தன்னுடைய வழக்கத்தை விடாமல், "ஒன்று மில்லை. ஒரு புக்-போஸ்டு தானிருக்கிறது" என்று ஒரு கவரை என் கையில் கொடுத்தார்.

கேவலம் ஒரு புக்-போஸ்டில் இருந்த விஷயம் என்னை இப்படிச் சிந்தனையில் ஆழ்த்தும், இப்படி என் மனதில் ஒன்றன் பின் ஒன்றாக அலைகளைப் போல் பல ஞாபகங்களைக் கிளப்பிவிடும் என்று நான் நினைக்கவே இல்லை. அந்த புக்-போஸ்டில் அப்படி என்ன விஷயந்தானிருந்தது?

கவரைப் பிரித்துப் பார்த்தேன். அதில் ஒரு திருமண அழைப்புப் பத்திரிகை இருந்தது. அதை வாசித்துப் பார்த்தேன். மாப்பிள்ளையோ, பெண்ணோ எனக்குப் பரிச்சய மானவர்களாகத் தோன்றவில்லை. மாப்பிள்ளையின் தந்தையும் எனக்குத் தெரிந்தவரில்லை. பெண்ணின் தகப்பனாரும்

எனக்கு உறவினராய்த் தோன்ற வில்லை. அப்படியானால் எனக்கு ஏன் அழைப்பு வந்திருந்தது? இம்மாதிரி விஷயங்களில் எல்லாம் என் மனைவிதான் எனக்கு அகராதி; அவளைக் கேட்டால் யாருக்குக் கல்யாணம், அவர்கள் எங்களுக்கு எப்படி உறவு என்ற விஷய மெல்லாம் சுலபமாய்த் தெரிந்துவிடும். லங்காஸ்டர் அரசர்கள், யார்க் அரசர்கள் இவர்களின் கொடிவழி ஜாபிதா எல்லாம் எனக்குத் தலைகீழ்ப் பாடம். பவேரியா தேசத்து ஜோஸப் பெர்டினண்டுக்கும், அஞ்சோப் பிரபுவாகிய பிலிப்புக்கும் ஸ்பெயின் சிம்மாதனத்திற்கு என்ன உரிமை உண்டென்று பிறருக்கும் விளக்கிச் சொல்வேன். ஆனால் என் குடும்பத்தின் கொடி வழி ஜாபிதாவை எனக்குப் புரிய வைப்பதற்கு என் மனைவிதான் வேண்டும்! இந்தப் பத்திரிகையை அவளிடம் காட்டினால், விஷயம் விளங்கி விடும். ஆனால் அதிலும் ஒரு ஆபத்து உண்டு.

சொந்த ஊரிலிருந்து சுமார் இரு நூறு மைல் தூரத்தில் நாங்கள் இருக்கிறோம். ஆனால் அவளுக்கு மைல் பெரிதல்ல, மனிதர்கள்தான் பெரிது. இந்தக் கலியாணத்திற்கு உடனே புறப்படவேண்டு மென்று பிடிவாதம் செய்வாள். ஆனால் அதற்காகப் பயந்து கொண்டு விஷயத்தை அறியாம லிருக்க என் மனம் இடங்கொடுக்கவில்லை.

தம்பதிகளிருவரையும் எனக்குத் தெரிய வில்லை. தம்பதிகளின் தந்தைமாரும் எனக்குத் தெரிந்தவர்களல்ல. ஆனால் இருநூறு மைல்களுக் கப்பாலிருந்த என் விலாசத்தை விசாரித்து, எனக்கு அழைப்புப் பத்திரிகை அனுப்பப் பட்டிருந்தது. யார் அவ்வளவு அக்கறை எடுத்து அனுப்பியது? அதில் ஏதோ மர்மம் இருப்பதாகத் தோன்றிற்று. ஆகையால் அதை அவசியம் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆவல் உண்டாகியது.

என் மனைவி பத்திரிகையைப் பார்த்ததும் சிறிது நேரம் விழித்தாள். அகராதிக்கே சந்தேகம் ஏற்பட்டால் அப்புறம் என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கையில், "ஓஹோ!" என்றாள் என் மனைவி.

நான் சிறிது உற்சாகத்துடன், "கண்டு பிடித்து விட்டாயா?" என்றேன்.

"பந்தலகுடி பகவான் செட்டியார் மகன் என்று தானே போட்டிருக்கிறது?"

"'ப. மு. பகவான் செட்டியார் குமாரத்தி' என்று போட்டிருக்கிறது."

"ஆமாம், அவள் தான்"

"யார்?" என்று நான் கேட்டேன்.

"அடியே! சிவகாமியின் பெண்ணுக்கா கலியாணம்?" பக்கத்தில் வேறு பெண் யாரும் இல்லாததால், இது என் மனைவியின் தனிமொழியாயிருக்க வேண்டுமென்று அறிந்து கொண்டேன். ஆனால் இன்னும் கலியாணம் யாருக்கு என்பது புரியவில்லை.

"எப்படிப் பிறந்து எப்படி வளர்ந்தவள்! அவள் கூடச் சம்பந்தம் செய்யப் போகிறான்!"

இதுவும் என் மனைவியின் தனி மொழி தான். ஆனால் விஷயம் சிறிது புலப்படுவது போல் தோன்றியது.

"எந்தச் சிவகாமியைச் சொல்கிறாய்?"

"அவள் தான் அவளுடைய தாய் தகப்பன் சிறு வயதிலேயே இறந்து விட்டார்கள். யாரோ ஒரு பெரியம்மாள் அவளை வளர்த்துக் கலியாணம் செய்து வைத்தாள் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்."

"யார்? திருச்சுழிச் சிவகாமியையா சொல்கிறாய்?"

"அவள் எந்த ஊரென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியாது. ஒரு வேளை திருச்சுழியாய்த்தா னிருக்கலாம்" என்று சொல்லி அவள் தன்னுடைய வேலைகளில் ஈடுபட ஆரம்பித்தாள்.

அவளுக்கு இக்கலியாணத்தில் அதிக சிரத்தை இல்லை. ஆனால் அவள் சொன்னதைக் கேட்டதும், என்னுடைய உரோமம் சிலிர்த்தது. 'சிவகாமியின் பெண்ணுக்குக் கல்யாணம்!' என்று பன்முறை என் மனதிற்குள் சொல்லிக் கொண்டேன். எனது உள்ளத் தேர் சுமார் பதினைந்து வருடங்களுக்கு முந்திய ஒரு காலத்திற்கு என்னை இழுத்துச் சென்றது. எனக்குச் சுமார் பதினேழு வயதாயும், அவளுக்குப் பன்னிரண்டு பதின்மூன்று வயதாயும் இருந்த காலம் அது. இன்பக் கனவுகளும், நினைவுகளுங் கொண்ட அவ்விளமைப் பருவத்தை நாடிச் சென்றது என் உள்ளம்.

"சாப்பிட வாருங்களேன்?" என்றாள் என் மனைவி.

உள்ளத்திற்கு ஏராளமாக உணவிருந்த அச்சமயத்தில் உடலுக்கு எவ்வித உணவுந் தேவையாய்த் தோன்றவில்லை. ஆகையால் அவளைச் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொள்

றுமாறு சொல்லிவிட்டு, நான் சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன்.

## 2

"ஏண்டா, இப்படி அவளைக் காணக் கருக்குலைக்கிறாய்? தாயுமில்லாமல், தகப்பனுமில்லாமல் சீரழிகிறதே என்று அவளைக் கூட்டிக்கொண்டு வந்தால், அவள் வந்த நாளிலிருந்து அவளை அரை நிமிஷமாவது சந்தோஷமாயிருக்க விட்டிருக்கிறாயா?"

"அனாதைக் கழுதைகளுக்கெல்லாம் இதுதானா புகலிடம்?"

"நீ என்ன தாயோடு சவலையாய் வாழ்கிறாயா? நீயும் இரண்டு வயதிலிருந்து என் கையைத்தானே ஒடிக்கிறாய்?"

"எனக்கு இந்த வீட்டிலிருக்க உரிமை உண்டு. அவளுக்கில்லை."

"ஏண்டா உரிமை இல்லை? உன் தாத்தா உன்னைக் கொண்டு வந்து வளர்ப்பதுபோல், என் தங்கை பெண்ணை நான் வளர்க்கத்தான் செய்வேன். பொல்லா உரிமையைக் கண்டவனல்லவா நீ? யாராவது ஏதாவது சொல்லட்டும், அப்புறம் பார்க்கலாம்."

"அதைத்தானே பார்க்கப் போகிறேன்!"

சிவகாமி எங்கள் வீட்டிற்கு வந்திருந்தாள். அப்பொழுதுதான் அவள் வந்த புதிது. ஏனோ தெரியவில்லை, அவள் வந்ததிலிருந்து எனக்கு அவளைச் சற்றேனும் பிடிக்கவில்லை. அதைப் பற்றித்தான் எனக்கும் என் பாட்டிக்கும் அடிக்கடி சச்சரவு நடந்தது. பாட்டி என்றால் முறைக்குப் பாட்டியே ஒழிய, உருவத்திலும் அவள் பாட்டி இல்லை; உண்மையிலும் அவள் எனக்குப் பாட்டியாயில்லை. அவள் என் தாத்தாவுக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப்பட்டவள். என் தாயாரின் வயதுதான் அவளுக்கிருக்கும். எனக்கு இரண்டு வயதாயிருக்கும் பொழுது, என்னைப் பாட்டியிடம் ஒப்புவித்து விட்டு என் தாய் சென்று விட்டாள். அன்றிலிருந்து அவள் எனக்குத் தாயின் ஸ்தானத்தையே வகித்தாள். அவளுக்கும் இரண்டு பெண்களும் ஒரு பையனுமிருந்தனர். அவர்களை எல்லாம் வளர்த்து, வளர்த்து எமன் கையில் "இந்தா!" என்று பிடித்துக் கொடுத்து விட்டாள். அவர்கள் இருந்த காலத்திலும், இல்லாத காலத்திலும் பாட்டி எனக்குத் தாயாகவே இருக்கிறாள்.

தேஜஸ் பொருந்திய அழகிய முகம். அதில் லட்சுமீகரம் குடிகொண்டிருக்கும். உண்மையில் அவள் வீட்டில் அடி எடுத்து வைத்த பின்புதான் எங்கள் வீட்டிற்குக் 'கூடி வந்தது' என்பார்கள். காலையில் குளித்து, நெற்றியில் குங்குமமிட்டு விட்டாலே, கோயிலில் வைத்துக் கும்பிடலாமென்றே தோன்றும்.

அவளுக்கு என்னை வளர்க்கும் பொறுப்புடன் இப்பொழுது அவளுடைய தங்கையின் பெண்ணை வளர்க்கும் பொறுப்பும் ஏற்பட்டது. சிவகாமியை எனக்குக் கொஞ்சமேனும் பிடிக்கவில்லை.

ஒரு நாள் காலையில் நான் இட்டிலி சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். மூச்சு விடாமல் சிவகாமி வந்து, எனக்குப் பின்னால் தண்ணீர்ச் செம்பை வைத்தாள்.

"உன் மகள் சமர்த்தைப் பார்த்தாயல்லவா? தண்ணீர்ச் செம்பை எங்கு வைப்பது? பட்டிக்காட்டுக் கழுதைகள் பிள்ளை வளர்த்திருக்கிற லக்ஷணத்தைப் பார்" என்றேன்.

"ஏண்டா, அவளை உனக்குப் பிடிக்காவிட்டால், அவளைத் திட்டேன். செத்துப் போன அவள் ஆத்தாளையும், அப்பனையும் ஏண்டா இழுக்கிறே?" என்றாள் பாட்டி.

சிறிது நேரத்திற்குப் பின்பு, சிவகாமி தன்னுடைய குடத்திலிருந்து தண்ணீர் எடுத்து வந்திருந்தாள் என்பது எனக்குத் தெரிந்தது. என் பாட்டியுடன் சிவகாமியும் ஒரு சிறு குடத்தை எடுத்துக் கொண்டு கிணற்றுக்குத் தண்ணீர் கொண்டுவரச் செல்வது வழக்கம்.

நான் சிவகாமியை வெறுத்ததோடு, அவள் தொட்ட சாமான்களையும் வெறுக்க வாரம்பித்தேன். நான் அவள் மீது கொண்ட பகைமை நாளுக்கு நாள் அதிகரித்தது. மேலும், சிவகாமிக்குப் புகலிடம் இல்லை என்றுதான் பாட்டி அவளை எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்திருக்கிறாளா, அல்லது வேறு அந்தரங்கமான நோக்கம் ஏதவும் அவளுக்கு உண்டோ என்றும் நான் சந்தேகித்தேன்.

"அவள் தொட்ட தண்ணீர் எனக்கு வேண்டாம்" என்றேன்.

"பின்னே, உனக்குத் தண்ணீர் எடுத்து வைக்க உன் பெண்டாட்டியாடா வைத்திருக்கிறாய்? என்னால் இப்பொழுது எழுந்திருக்க முடியாது. குடித்தால் குடி; இல்லாவிட்டால் சும்மா இரு."

"நான் தொட்ட தண்ணீர் ஆகாது என்றால், இட்டிலி மட்டும் ஏன் தின்கிறாய்?

அது நான் அரைத்த மாவுதானே!" என்றாள் சிவகாமி.

எனக்குக் கோபம் பொறுக்க முடியவில்லை: "உன் கரிக் கையைக் கண்டதில் எல்லாம் ஏன்டி வைக்கிறாய்?" என்று இட்டிலி தின்பதை விட்டு எழுந்து, ஈரக் கையோடு அவளுடைய கன்னத்தில் பலமாய் ஒரு அறை கொடுத்தேன்.

பாட்டிக்கு ஆத்திரம் பொறுக்க முடியவில்லை. ஆனால் என்மீது காட்டவேண்டிய கோபத்தை எல்லாம் அவள்மீது கொட்டினாள். "அறிவு கெட்ட கழுதை! உனக்கு நன்றாய் வேண்டும்! அப்பனையும், ஆத்தாளையும் இந்த வயதிலேயே தூக்கிவிட்ட கழுதைக்கு என்னடி வாய்? உனக்கென்னடி பேச்சு? பேசாமல் மூலையில் அவிந்து கிடக்காமல் அவனுக்கு ஏன்டி தண்ணீர் எடுத்து வைக்கிறாய்?" என்று அவளைத் திட்டிவிட்டு மௌனமாய்க் கண்ணீர் வடிக்க வாரம்பித்தாள்.

என் தந்தை இரண்டாந்தாரம் கலியாணம் செய்துகொண்டு உள்ளூரிலேயே தனிக் குடித்தனம் நடத்திக் கொண்டிருந்தார். வியாபாரமும் தனி. நான் அவருடன் அதிகமாய்ப் பழகுவதில்லை. ஆயினும் தந்தை என்ற மரியாதை மட்டுமுண்டு. எப்பொழுதாவது நான் அவரிடம் செல்லும்போது, "பாட்டி முன்போல் உன்மீது பிரியமாயிருக்கிறாளா? அவள் தங்கை மகள் ஒருபெண் வந்திருக்கிறாளே?" என்று கேட்பார்.

"பிரியமாய்த் தானிருக்கிறாள்" என்பேன்.

அப்புறம் ஓரணாவோ, இரண்டணாவோ கொடுப்பார். வாங்கிக்கொண்டு வந்து விடுவேன்.



ஒரு நாள் நான் அவரிடம் சென்று கடையில் விடை பெற்றுக்கொண்டு திரும்பு பொழுது, எனக்குப் புத்திமதிபோல் சில வார்த்தைகள் கூறினார்.

"உன் பாட்டியின் எண்ணம் என்னவென்று சரியாய்த் தெரியவில்லை. ஆனால் எட்டடி ஏதாவது பேச்சு வந்தால், நீ சம்மதித்து விடாதே" என்றார்.

நான் பதில் சொல்லாமலிருந்தேன்,

"உனக்கு எத்தனையோ பெண்கள் கைகளுடனும் நல்ல பணத்துடனும் (வரதக்ஷிணை) வருமடா. உனக்கெதற்கு இந்த அனாதைப் பெண்?" என்றார்.

இதுகூடவா எனக்குத் தெரியாது? நான் உங்களைவிட ஜாக்கிரதையாகத்தான் இருக்கிறேன் என்று மனதில் நினைத்துக் கொண்டேன். ஆனால் வெளியில் ஒன்று பதில் சொல்லவில்லை.

ஒரு நாள் திடீரென்று என் பவுண்டன் பேனாவைக் காணோம். உடனே எனக்கு சிவகாமியின் மீது சந்தேகம் உண்டாயிற்று. சிறிது நேரத்திலேயே சந்தேகம் நிச்சயமான நம்பிக்கையாக மாறியது. பின்பு அவளை பல வழிகளிலும் துன்புறுத்த ஆரம்பித்தேன்.

"முழிக்கிற முழியைப் பார்த்தாலே இவள்தான் எடுத்திருக்க வேண்டுமென்று தெரிகிறதே, கள்ளி!" என்றேன்.

"உன் பேனாவை எடுத்து, அவள் என்னடா செய்யப் போகிறாள்?" என்று பாட்டி கேட்டாள்.

"விற்பாள்!"

"அவள் யாருக்கடா விற்கப் போகிறாள்?

"அது எனக்கு எப்படித் தெரியும்?"

இம்மாதிரி சமயங்களிலெல்லாம் பாட்டி சிவகாமியின் பக்கமே சேர்ந்து பேசியது என் பொறுமையைத் தாண்டி விட்டது. அவள் யார் மீது அதிகப் பிரியமாயிருக்கிறாள் என்பதை இச்சம்பவமெல்லாம் காட்டுவதாக நினைத்தேன். பாட்டி முன்பு என்மீது அதிகப் பிரியமாயிருந்தாள். ஆனால், இப்பொழுது?

நான் மாடியிலிருந்து கொண்டு சிவகாமியை அழைத்தேன். எதற்காக? குற்றவாளியைப்போல் அவளை நிறுத்தி விசாரிப்பதற்காக.

ஆனால் அவள் வரவில்லை. "நீ அங்கு போக வேண்டாமடி" என்று பாட்டி அவளைத் தடுத்து நிறுத்தி விட்டாள்.




என் கோபம் முன்னிலும் அதிகரித்தது. தாத்தா இச்சம்பவங்களை எல்லாம் கூர்மையாகக் கவனித்துக் கொண்டிருந்தார். அவர் மிகுந்த சூக்ஷ்ம புத்தி உடையவர்.

எங்கோ வெளியூருக்குச் சென்று விட்டுத் திரும்பியவர், வீட்டிற்கு வந்தவுடன், "சிவகாமிக்கு ஒரு மாப்பிள்ளை கொண்டு வந்திருக்கிறேன்" என்று பாட்டியிடம் சொன்னார். என்னையும் ஒருமுறை அர்த்த புஷ்டியுடன் பார்த்தார்.

"இனியாவது சனியன் தொலைந்து விடும்" என்று நான் நினைத்தேன்.

"இரண்டாந்தாரத்து மாப்பிள்ளைதான். ஆனால் வயதொன்றும் அதிகமில்லை. நாற்பதிருக்கலாம். சொத்திருக்கிறது. சாப்பாட்டிற்கு மயக்கமில்லை" என்று சொன்னார்.

அனாதைச் சிவகாமிக்கு இரண்டாந்தாரத்து மாப்பிள்ளைதான் கிடைக்குமென்று எல்லாருமே தீர்மானம் செய்து விட்டார்கள் போலும். பாட்டியுங்கூடச் சந்தோஷப்பட்டாள் என்றே சொல்ல வேண்டும்.

"ஐந்நூறு ரூபாய்க்கு மாப்பிள்ளை நகை போடுகிறார். அத்துடன் கலியாணச் செலவும் அவர் புறந்தான். நமக்கு ஒரு காசு செலவு கிடையாது" என்றார் தாத்தா.

சமீபத்திலேயே முகூர்த்த தினமும் நிச்சயித்துவிட்டு வந்திருந்தார் அவர்.

அதற்கப்புறம் சிவகாமியின் நடையிலும், போக்கிலும், ஒரு புதிய மாறுதல் தென்பட்டது.

ஒருநாள் நான் ஏதோ நினைத்துக் கொண்டு மாடியில் உட்கார்ந்திருந்தேன். படிப்பில் ஏனோ, என் மனம் செல்லவில்லை. சிவகாமி ஏதோ அலுவலாக மாடிக்கு வந்தாள். எனக்கு என்ன தோன்றியதோ, அறியேன். சட்டென்று எழுந்து சென்று அவளை அணுகி அவளுடைய கைகளைப் பிடித்தேன். "சிவகாமு! உனக்குக் கலியாணமாமே! இன்னுஞ் சில தினங்களில் நீ உன் புருஷன் வீட்டிற்குப் போய் விடுவாய். அப்புறம்......" என்று கொஞ்சுதலாய்ச் சொன்னேன்.

"உன் ஆதரவும் வேண்டாம், உன் அடியும் வேண்டாம்" என்று வெடுக்கெனத் தன் கைகளைப் பிடுங்கிக்கொண்டு சென்று விட்டாள்.

3

சிவகாமிக்குக் கலியாணமாகி அநேக மாதங்களாய் விட்டன. அவளை எங்கள் வீட்டிற்குப் பாட்டி அழைத்து வந்திருந்தாள். அப்பொழுது அவளுக்குச் சாந்தி முகூர்த்தமும் ஆகியிருந்தது. அவளைப் பார்த்ததும் நான் பிரமித்தேன். இப்போது என் கண்களுக்கு முன் தோற்றமளித்த தேவதை தானா, நான் முன்னம் பார்த்துப் பழகிய சிவகாமி, என்ற வியப்பு எனக்கு உண்டாயிற்று. இளமையின் பூரிப்பிலும், பொலிவிலும் அவள் திளைத்துக் கொண்டிருந்தாள். யௌவனப் பருவம் அவளுடைய மேனிக்கு மெருகிட்டிருந்தது.

இன்று அவள் அனாதைச் சிவகாமியல்ல. ஆதரவற்று எங்கள் வீட்டிற்கு வந்திருக்கவில்லை. நாங்கள் விரும்பி அழைத்த ஒரு விருந்தினளாய் வந்திருந்தாள். இப்பொழுது அவளுக்கும் ஒரு சொந்த வீடுண்டு. சொத்துண்டு சுகமுண்டு. ஏழைச் சிறுமியாய்ப் பிறந்த மேனியை ஒரு பீற்றல் துணியால் மூடிக்கொண்டு வந்த சிவகாமியல்ல அவள். அவளுடைய அழகிய அங்கங்களில் அங்கங்கே பொன்னும் மணியும் மிளிர்ந்தன. விதவிதமான புது ஆபரணங்கள் அவளுடைய உடலை அலங்கரித்தன. அழகிய பட்டாடை ஒன்று அவளுடைய மேனியை ஒட்டித் தழுவிக் கொண்டிருந்தது.

நேசிப்பாரற்று அன்புப் பிச்சை கேட்டு அவள் எங்களிடம் வரவில்லை. அவள் மீது அன்பு செலுத்துவதற்கு ஒரு கணவர் இருக்கிறார். இனி அவள் யாருடைய தயவையும்

எதிர்பார்க்க வேண்டியதில்லை. ஒருவருக்கும் அஞ்சி நடக்க வேண்டிய அவசியமுமில்லை. அவளுடைய நடையும், பார்வையும், பேச்சும் அதை எனக்கு எடுத்துச் சொல்வது போல் தோன்றின.

குதிரை வண்டியினின்றும் இறங்கி, ஒரு கையில் வெள்ளிக் கூஜாவுடனும், இன்னொரு கையில் தோல் பெட்டியுடனும் அவள் வீட்டிற்குள் நிமிர்ந்த நேரிய நடையுடன் நுழையும்போதே நான் பார்த்தேன். 'நான் இப்பொழுது ஏழைச் சிவகாமியல்ல' என்று அறைகூவிக் கொண்டே அவள் வருவது போல் தோன்றியது. சிலவருஷங்களுக்கு முன்பு அவள் முதன் முதலில் எங்கள் வீட்டிற்கு வந்த காட்சி அப்பொழுது எனக்கு ஞாபகம் வந்தது. உடுத்திய துணிபோக, மீதமுள்ள துணிகளைச் சுருட்டிய ஒரு பொட்டணத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, தனக்கு எத்தகைய வரவேற்புக் கிடைக்குமோ என்று பயந்தவளாய், கூனிக்குறுகி, அஞ்சி அஞ்சி வீட்டிற்குள் அடி எடுத்து வைத்தாள். அதற்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்?

இளமையின் மினுக்கும், குலுக்குமா அவளுக்கு அவ் விகாரத்தைக் கொடுத்தன? சிறிது கொடுத்திருக்கலாம். ஆனால் இளமைப்பருவம் அவளுக்கு மெருகிட்டதே ஒழிய மூலாம் பூசவில்லை. அவள் இயற்கையிலேயே அழகிதான். இன்றைக்குத் தோன்றும் இவ் விகார சக்திகளெல்லாம், சிறு பிராயத்திலும் அவளிடம் இருந்தன. அன்று வித்து உருவத்தில் மறைந்திருந்தன. இன்று அவை வளர்ச்சியுற்று வெளித்தோன்றியிருந்தன.

முன்பு நான் அவளுடைய அழகை ஏன் கவனிக்கவில்லை; பொருட்படுத்தவில்லை. நான் ஏன் அவளை வெறுத்தேன்? அவளுடைய ஏழ்மையும், அநாதரவான நிலைமையுந்தான் என் கண்களை அதிகமாக உறுத்தினவா? அதனால் தான் அவளை நான் புறக்கணித்தேனா? அதுதான் காரணமா? அதில் சிறிது உண்மை இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் முழு உண்மையும் அதுவல்ல. அப்படியாயின் உண்மையான காரணம் என்னவாக இருக்கக் கூடும்?

பால் உணர்ச்சி முற்றிலும் வளர்ச்சி உறாத அச் சிறு பருவத்தில் சிவகாமியை நான் ஒரு பெண்ணாகவே மதிக்கவில்லை. என்னுடன் எல்லாவற்றிலும் போட்டியிட வந்த ஒரு சிறிய மனிதப் பிராணியாகவே கருதினேன். எதையும் பங்கிட்டுக் கொள்ளும் சுபாவமில்லாத அவ்வயதில் பொறாமைக் குணந்தான் மேலோங்கி இருந்தது. அதுவரை பாட்டியின் அன்பு முழுமைக்கும் நான் ஒருவனே பாத்திரமாயிருந்தேன். அதில் ஒரு பகுதியை அபகரித்துக் கொள்வதற்குச் சிவகாமி வந்து சேர்ந்தாள். என்னை மட்டும் கூப்பிட்டுக் கொண்டிருந்த வாய், இப்பொழுது 'சிவகாமி! சிவகாமி!' என்று அடிக்கடி கூப்பிட்டது. எனக்கு மட்டும் அன்னமளித்த கை, இப்பொழுது அவளுக்கும் அன்னமிட்டது. தாயின் அன்பு இன்னதென்றறியாத உள்ளம், பாட்டியின் அன்பில்தான் சிறிது ஆறுதலுற்றிருந்தது. அதைப் பங்கிட்டுக்கொள்ள அவள் வந்து விட்டாள்! சிறிது அதிகப் பங்கே அவளுக்குக் கிடைத்துவிடுமோ? அவள் பாட்டியின் தங்கை பெண். நான் பாட்டியினுடைய சககளத்தியின் பேரன்!

சிவகாமியின் கலியாணம் தீர்மானமாகியவுடன், பாட்டியின் அன்பை அனுபவிப்பதில் எனக்கிருந்த ஆபத்து நீங்கிவிட்டது என்று நினைத்தேனே. என்னவோ அப்பொழுது தான் என் கண்கள் திறந்தன. தன் கைகளை அவள் வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு சென்றபொழுது, 'ஐயோ! ஒரு அழகிய கிளியைப் பறக்க விட்டு விட்டேனே!' என்ற உணர்ச்சியே என் உள்ளத்தில் ஏற்பட்டது.

அவள் அடிக்கடி மாடிக்கு வந்தாள். மாடியில்தான் நான் படித்துக் கொண்டிருப்பேன். அவள் வந்த போதெல்லாம் என்னையுமறியாமல், என் கண்கள் அவளை நாடின. ஆனால் அவள் என்னை ஒரு தடவையாவது ஏறிட்டும் பார்க்கவில்லை. ஏன் பார்ப்பாள்? பார்க்கக் கூடாதல்லவா?

சில தினங்களுக்குப் பின் அவள் போய் விட்டாள். பௌர்ணமிக்குப் பின் தின



ன்று அமாவாசை வந்துவிட்டது போல் தான்றியது.

**பா**ட்டிக்கு அவன்மீது அளவு கடந்த ஞ்சை. அவளைப் பார்த்துவிட்டு வருவ தற்காகப் பாட்டி ஒரு முறை அவளுடைய ட்டிற்குச் சென்றாள். பாட்டி திரும்பி த்ததும், அவளைப் பற்றிய சமாசாரங் ளைத் தெரிந்துகொள்ள நான் மிக்க வலுடனிருந்தேன். ஆனால் எப்படிக் கட்பது? ஒரு நாள் தாத்தாவிடம் வளே சொல்ல வாரம்பித்தாள். சிவகாமி ன் வாழ்க்கை விவரங்களையும், அவ ளுடைய சமர்த்தையும். அவளுடைய ணவன் அவள்மீது காட்டும் அன் பையும், அவள் கணவனுக்குச் செய்யும் ணிவிடைகளையும் விரிவாகச் சொன்னாள். ட்டியின் வார்த்தைகளைக் கேட்டதும், த்தாவுக்கு என்ன தோன்றியதோ தெரிய ல்லை. "உங்கள் வமிசத்திற்கே இரண் டாந்தாரத்து மாப்பிள்ளைதான் தலையில் ழுதியதோ?" என்று குத்தலாகக் கட்டார்.

"பேரனுக்கு அவளைக் கலியாணம் ண்ணிலேனும் இல்லையே என்று இப் பொழுது உங்களுக்கு அடித்துக் கொள்கிற தாக்கும்?" என்று பாட்டி கேட்டாள்.

"எனக்கு மட்டுந்தான் பேரன், உனக் ல்லையா? அவனுக்கு நல்ல பெண்ணைப் ார்த்துக் கட்டும் உரிமை உனக்கும் இருக் றதல்லவா? சிவகாமியை இவனுக்கேதான் ட்ட வேண்டுமென்று நீ ஏன் சொல்ல ல்லை?"

"அவன்தான் பூனையைக் கண்ட நாய் போல் சீறிக் கொண்டிருந்தானே! நான் ப்படிச் சொல்வேன்?" என்று சொல்லி ட்டுப் பாட்டி மேலும் கூறலானாள்: உங்கள் வமிசந்தான் உறவினருடன் ட்டாத வம்சம். எங்களுக்கு எப்போதும் சாந்தக்காரர் மீது பாசமுண்டு. இவன் வளை எப்படி எல்லாம் படுத்தி வைத்தான்? வேறொருத்தி யிருந்தால், இப் பக்கக்கூடத் லை வைத்துப் படுக்க மாட்டாள். இப் பொழுது நான் அங்கு போனதும், முதன் தலில், "அண்ணன் சுகமா யிருக்கிறதா?" ன்று அவள் கேட்டதைப் பார்த்ததும், னக்குக்கூட ஆச்சரியமாய்ப் போய் ட்டது. இவனைப்பற்றி பேசினால் அவ ளுக்குக் கொள்ளை ஆனந்தம்."

பாட்டி மேலும் பேசினாள். "அண்ணன் இப்பொழுது பத்தாவது வகுப்பிலா படித் துக் கொண்டிருக்கிறது? பத்தாவது பாஸ் பண்ணினவுடன் மேல் படிப்புக்குப் போகத் தானே? ஏன், இங்கே அனுப்பினால் என்ன? எங்கள் வீட்டில் சாப்பிட்டுக் கொண்டு காலேஜில் படிக்கட்டுமே? அண்ணனுக்கு நல்ல பெண்ணைப் பார்த்துக் கலியாணம் பண்ண வேண்டும் அம்மா?' என்கிறாள். அவளுக்கு எத்தகைய வாஞ்சை இருக் கிறது?" என்றாள் பாட்டி.

எந்தச் சமயத்தில் என்ன நேரப் போகிறது என்று மனிதனுக்குத் தெரிவ தில்லை. இப்படிப் பாட்டி சொல்லிக் கொண் டிருந்தபோதே, எங்கள் வீட்டிற்குச் சிவகாமியின் கணவர் வந்தார். பாட்டி என்னவோ, ஏதோ என்று பயந்தாள். சமீபத்தில்தானே அவளைப் பார்த்து விட்டு வந்திருந்தாள். அதற்குள் என்ன நேர்ந்தது?

பாட்டியின் பீதியை வெகு சீக்கிரத்தி லேயே அவர் போக்கினார். அவருக்கு முதல் தாரத்தின் மூலம் ஒரு பெண்ணிருந்தாள். அவளை எனக்குக் கலியாணம் பேசி முடிப் பதற்காக வந்திருந்தார்! பாட்டியின் சந் தோஷத்திற்கு அளவில்லை. நல்ல பெண் தான். தந்தையோ பணக்காரர். சீர் எல்லாம் நன்றாய்ச் செய்வார். முடி யும். பணமும் அதிகம் கொடுக்கக் கூடியவர். உறவுக்குள் உறவு, ஒன்றுடன் ஒன்று பின்னிக் கொண்டிருக்கும் என்று நினைத்தார். ஆனால் தாத்தாவோ, "பையன் பத்தாவதுகூட இன்னும் முடிக்கவில்லை. மேல் படிப்புக்கும் போக வேண்டும். இப் பொழுதென்ன கலியாணம்!" என்றார்.

ஆனால் வந்தவரோ விடுவதாயில்லை. "இப் பொழுது பேசி வெற்றிலைப் பாக்குப் பரி மாறிக் கொண்டால், மாப்பிள்ளை பத்தாவது பாஸ் பண்ணின பிறகே முகூர்த்தத்தை வைத்துக் கொள்ளலாம். மேல் படிப்பின் பொறுப்பையும் நானே ஏற்றுக் கொள் ளத் தயாரா யிருக்கிறேன்" என்றார்.

பாட்டியின் தூண்டுதலும் இத்துடன் சேரவே, தாத்தா இசைய வேண்டி நேர்ந் தது. எல்லாம் விஷயங்களும் பேசி முடிக் கப்பட்டன.

இச் சம்பவத்திற்கப்புறம் சிவகாமியின் குடும்பத்திற்கும் எங்கள் குடும்பத்திற்கும் போக்கு வரவு அதிகமாயிற்று. பாட்டி அவளுடைய வீட்டிற்கு அடிக்கடி சென்று வர ஆரம்பித்தாள். ஒவ்வொரு தடவை அங்கிருந்து வந்தபோதெல்லாம் அங்கு நடந்த வரலாறுகளை எல்லாம் மிகுந்த குதூ கலத்துடன் வர்ணிப்பாள். அவ் வரலாற்றில்

ஏனோ எனக்குச் சிவகாமியின் பதிலைக் கேட்பதில்தான் அதிக ஆர்வமிருந்தது.

"உன்னுடன் சம்பந்தம் ஏற்படுத்திக் கொள்வதில் சிவகாமிக்குப் பரம திருப்தி!" என்று கடைசியாக என்னை நோக்கிப் பாட்டி சொன்னாள்.

## 4

பெரிய நதிகளெல்லாம் சிறிய ஆரம்பத்தையே கொண்டுள்ளன என்று சொல்கிறார்கள். அதுபோல் பெரிய காரியங்கள் எல்லாம் ஒரு சிறிய அடிப்படையையே காரணமாகக் கொண்டுள்ளன. ஓர் அற்பமான காரணத்தை முன்னிட்டு எனக்கும் சிவகாமியின் மூத்தாள் பெண்ணுக்கும் நடக்கவிருந்த விவாகமானது நின்று விட்டது. ஆகையினால் எங்களிரு குடும்பங்களுக்கிடையே போக்குவரவும் இல்லாமற் போய்விட்டது. என் பாட்டியைக் கூடத் தன் தங்கை மகளைப் போய்ப் பார்க்கக் கூடாதென்று தாத்தா தடுத்து விட்டார்.

சிவகாமி வசித்த அதே ஊரில்தான் நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். சிற்சில சமயங்களில் நான் அவளுடைய வீட்டு வழியாகச் செல்வதுண்டு. அச்சமயங்களில் எல்லாம், போகிற போக்கிலேயே நான் அவளுடைய வீட்டினுள் நோக்குவேன். அநேக சமயங்களில் போகிற வேகத்தில் ஒன்றுந் தென்படாது. ஒவ்வொரு சமயம் அவளுடைய உருவம் மங்கித் தென்படும். ஒரு தடவை அவளுடைய சத்தம் கேட்கும். அவ்வளவுதான். ஆனால் அதிலும் ஒரு திருப்தி, ஓரின்பம். சில வேளைகளில் நான் எதிர்பாராதவாறு அவள் வாசலிலேயே நின்று கொண்டிருப்பாள். என்னை எதிர் பார்த்துத்தான் நின்று கொண்டிருந்தாளோ?

ஒருநாள் அவளை நான் கோயிலில் சந்தித்தேன். எங்கள் கண்கள் சந்தித்தன. ஆனால் ஒருவரும் பேசவில்லை.

அதற்கப்புறம் அநேக வருடங்களுக்குப் பின் அவளை மீண்டும் சந்திக்கும் சந்தர்ப்பம் நேர்ந்தது. நான் எங்கோ வேகமாய்ச் சென்று கொண்டிருந்தேன். "டே! ஓடாதேயடா! விழுந்து விடுவாய்" என்று ஒரு குரல் கேட்டது. நான் திரும்பிப் பார்த்தேன். சிவகாமி! அவளுக்கு முன்னால் ஒரு சிறுவன் ஓடிக் கொண்டிருந்தான். அவளுடைய மகன் போலும். அவனைத்தான் அவள் அவ்விதம் கண்டித்துக் கொண்டிருந்தாள். நான் சற்று நிற்கலாமென்று யோசித்தேன். நின்றிருந்தால், அவள் என்னுடன் பேசியிருப்பாளோ, என்னவோ! ஆனால் அப்படி நிற்பதற்கு எனக்குத் தைரியம் வரவில்லை. முன்னைவிட வேகமாகச் சென்றுவிட்டேன்.

அதன் பின்பு வருடங்கள் பல கழிந்து விட்டன. அவளைப் பார்க்கும் சந்தர்ப்பம் ஏற்படவே இல்லை. எப்படி ஏற்படும்? நான் என் சொந்த ஊருக்கு நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் அல்லவா இருக்கிறேன்!

அவளைப் பார்க்க முடியாவிட்டாலும், அடிக்கடி அவளைப் பற்றி என் உள்ளத்தில் நினைக்கிறேன். அது சரியா? தவறு, தவறென்றுதான் பெரியவர்கள் எல்லாம் சொல்லியிருக்கிறார்கள். ஆயினும் அவளுடைய நினைவை அகற்றுவதற்கு முடியவில்லை. நான் ஏதாவது கொடிய செயலைச் செய்யப் புகுங்கால், "இதைச் சிவகாமி பார்த்தால் என்ன நினைப்பாள்?" என்று என்னையுமறியாமல் என் மனம் கேட்கிறது. உடனே அச் செயலைச் செய்யாது விடுகிறேன். இதைக் கண்டால் அவள் சந்தோஷமடைவாள் அல்லவா என்று நினைத்து நல்ல காரியத்தை மேலும் நன்றாய்ச் செய்கிறேன். இங்ஙனம் நான் எதிர்பாராதவாறு என் வாழ்க்கையில் அடிக்கடி சிவகாமி வந்து கலக்கிறாள். அவளுடைய நினைவு என் உள்ளத்திற்கு வை[illegible]மும், என் சிந்தனைக்குத் தெளிவும், என் சொல்லுக்கு இனிமையும், என் செயலுக்கு இங்கிதமுங் கொடுக்கின்றது. அவள் தான் என் வாழ்க்கையை வளம் படுத்துகிறாள். அவளைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் என் மனம் குதூகல மடைகிறது.

அந்தச் சிவகாமியின் ஜேஷ்ட புத்திரனுக்குத்தான் கலியாணமாம். அதற்காகவே எனக்கு அழைப்பு வந்திருந்தது. இத்தனை வருடங்களுக்கப்புறம், இவ்வளவு தூரத்திலிருக்கும் என்னை ஞாபகப் படுத்தி, என் விலாசத்தை எப்படியோ விசாரித்து எனக்கும் ஓர் அழைப்புப் பத்திரம் அனுப்பியிருந்தாள். அத் திருமண அழைப்பிதழைத்தான் எங்கள் போஸ்ட் மாஸ்டர் தன்னுடைய வழக்கமான பீடிகையுடன் "ஒன்றுமில்லை! ஒரே ஒரு புக் போஸ்டுதான் இருக்கிறது!" என்று சொல்லி விட்டு என் கையில் கொடுத்தார்!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

Regd. No. M 4392

# சார்லீஸ் மில்க்




அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப் புகாத
உறைகளில்

# பிஸ்கட்ஸ்

**CHARLEY & CO., USILAMPATTI**

MADRAS BRANCH: 158, POONAMALLEE HIGH ROAD.